# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

செப்டம்பர்—1980
புரட்டாசி



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தற்கால மக்களின் ஆன்மிக மறுமலர்ச்சிக்கு ஏற்ற வகையில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர் காட்டிய வழியில் மத உண்மைகளை இந்த மாதப் பத்திரிகை வெளியிட்டு வருகிறது.

## சந்தா விவரம்

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 12 |
| ஆயுள் சந்தா | ரூ. 150 |
| தனிப் பிரதி | ரூ. 1-20 |

ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.

வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.

## வேண்டுகோள்

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.


தொலைபேசி : 71231



விவரங்களுக்கு:

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

# Ramakrishna-Vivekananda & Vedanta Literature






**SRI RAMAKRISHNA MATH**
16, RAMAKRISHNA MATH ROAD,
MYLAPORE, MADRAS-600 004.



| Title | Edition | Rs. P. |
|---|---|---|
| Sri Ramakrishna The Great Master I Vol. | Ordinary | 20-00 |
| | Deluxe | 35-00 |
| II Vol.— | Ordinary | 20-00 |
| | Deluxe | 35-00 |
| Sri Ramakrishna-A Biography | | 5-00 |
| Sri Ramakrishna Paramahamsa | | 2-40 |
| The Visions of Sri Ramakrishna | | 4-50 |
| Sri Ramakrishna as Swami Saw Him | | 2-50 |
| Sri Ramakrishna and his Mission | | 1-25 |
| Sri Ramakrishna (Pictorial) | | 0-35 |
| The Gospel of Sri Ramakrishna | | 45-00 |
| The Condensed Gospel of Sri Ramakrishna | Subsidised Edition | 5-00 |
| | Deluxe | 25-00 |
| Sayings of Sri Ramakrishna | Ordinary | 8-00 |
| | Deluxe | 13-00 |
| Tales and Parables of Sri Ramakrishna | | 9-00 |
| Sri Ramakrishna Upanishad | | 3-50 |
| Gems from the Gospel of Sri Ramakrishna | | 0-40 |
| Sri Ramakrishna Karnamritam | | 4-50 |
| Aratrika Hyms and Ramnam | | 2-50 |
| The Ramakrishna Leelasthanas | | 1-75 |
| Sri Sarada Devi The Holy Mother : Her Life and Conversations | Board | 14-00 |
| | Deluxe | 28-00 |
| Sri Saradadevi The Holy Mother (Life) | | 8-00 |
| Sri Sarada Devi The Holy Mother (Conversations) | | 7-00 |
| Holy Mother Sri Sarada Devi | Ordinary 18-00 Deluxe | 35-00 |
| Sri Sarada Devi Charitra Sangraha | | 5-00 |
| Swami Vivekananda (Pictorial for Children) | | 2-50 |
| Swami Vivekananda (for Students) | | 2-40 |
| Swami Vivekananda : Awakener of Modern India | | 2-50 |

| Title | Edition | Rs. P. |
|---|---|---|
| Inspired Talks | Ordinary | 5-00 |
| | Deluxe | 8-00 |
| Hinduism | | 2-75 |
| Education | | 2-75 |
| Vivekananda Writes to you | | 1-00 |
| The Voice of Vivekananda | | 0-40 |
| Vivekananda Writes to you | | 1-00 |
| Invitation to Holy Company | | In Press |
| From Holy Wanderings to Service of God in Man | | 6-00 |
| The Eternal Companion. | Board | 8-00 |
| | Deluxe | 14-50 |
| Swami Ramakrishnananda, The Apostle of Sri Ramakrishna to the South | | 4-50 |
| Swami Turiyananda | | 4-50 |
| Nagmahasaya | Ordinary | 3-50 |
| | Superior | 5-50 |
| The Ramakrishna Math and Mission : Its Ideals and Activities | | 1-50 |
| Isavasya Upanishad | | 2-00 |
| Kena Upanishad | | 2-00 |
| Kathopanishad | | 3-00 |
| Prasnopanishad | Ordinary | 2-00 |
| | Superior | 4-00 |
| Mundaka Upanishad | | 2-00 |
| Mandukya Upanishad | Ordinary | 1-25 |
| | Superior | 2-50 |
| Aitareya Upanishad | Ordinary | 2-00 |
| | Superior | 4-00 |
| Taitiriyopanishad | Ordinary | 4-00 |
| | Superior | 7-00 |
| Svetasvatara Upanishad | | 4-00 |
| Chandogya Upanishad | Ordinary | 15-00 |
| | Deluxe | 20-00 |
| Brihadaranyaka Upanishad | Ord. | 15-00 |
| | Deluxe | 25-00 |
| Mahanarayana Upanishad | Board 12-00 Deluxe | 17-00 |
| Taittiriya-Mantra Kosa (Part I) | | 2-50 |
| Taittiriya-Mantra Kosa (Part II) | | 3-00 |
| Srimad Bhagavad Gita | Board | 10-00 |
| | Deluxe | 18-00 |
| Srimad Bhagavad Gita | Pocket Edition | 3-00 |
| Bhagavad Gita, The Song of God | | 4-00 |

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

| தொகுதி—60 | செப்டம்பர் 1980 | இதழ்—9 |
|---|---|---|


## பொருளடக்கம்




# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை

—திருமூலர்

| தொகுதி 60 | ரௌத்திரி ௵ புரட்டாசி ௴ | இதழ் 9 |
|---|---|---|




वागीशाद्याः सुमनसः सर्वार्थानामुपक्रमे ।
यं नत्वा कृतकृत्याः स्युस्तं नमामि गजाननम् ॥

வாகீசாத்யா : ஸுமனஸ : ஸர்வார்த்தானு—முபக்ரமே |
யம் நத்வா க்ருதக்ருத்யா : ஸ்யுஸ் தம் நமாமி கஜானனம் ॥

— ஸ்ரீ தேவி பாகவதம்

*பிரம்மா முதலிய தேவர்கள் எல்லாச் செயல்களின் தொடக்கத்திலும் எவரை வணங்கிக் காரியஸித்தி அடைந்தார்களோ அத்தகைய கஜானனரை வணங்குகிறேன்.*

உண்ணும்சோறு பருகுநீர்
தின்னும் வெற்றிலையு மெல்லாம்
கண்ணன் எம்பெரு மானென்றென்றே
கண்கள் நீர்மல்கி
மண்ணினுள் அவன்சீர்
வளம் மிக்கவனூர் வினவித்
திண்ணம் என்இளமான்
புகுமூர் திருக்கோளூரே

— நம்மாழ்வார்



# விநாயகருக்கு யானை முகம் தோன்றிய வரலாறு

'வால்மீகி'

விநாயக புராணம் என்பது வியாசர் எழுதிய புராணங்களில் ஒன்றல்ல. கிருஷ்ணவதார காலத்தில் வியாசபகவான் வேதங்களை நான்கு பகுதிகளாகப் பிரித்து இயற்றி, வேத வியாசர் என்ற பெயரைப் பெற்றார். அவரே பதினெட்டு மகாபுராணங்களையும் மொத்தம் நான்கு லட்சம் சுலோகங்களில் இயற்றினார். இந்தப் பதினெட்டுப் புராணங்களும் அவற்றில் அடங்கிய சுலோகங்களும் வருமாறு :-

ஸ்காந்தம் 81,000, பத்மபுராணம் 55,001 விஷ்ணு புராணம் 24,000 வராக புராணம் 24,000, நாரத புராணம் 24,000, சிவ புராணம் 24,000, பிரம்மவைவர்த்த புராணம் 18,000, கூர்ம புராணம் 18,000, கருட புராணம் 18,000, பாகவத புராணம் 28,000—இந்தப் பத்துப் புராணங்களும் சேர்ந்து மொத்தம் மூன்று லட்சத்து நாலாயிரம் சுலோகங்கள்.

மிகுதியாயுள்ள பிரம்ம புராணம், பிரம்மாண்ட புராணம், அக்னி புராணம், பவிஷ்யத் புராணம், லிங்க புராணம், வாமன புராணம், மத்ஸ்ய புராணம், மார்க்கண்டேய புராணம் ஆகிய எட்டுப் புராணங்களும் மொத்தம் 96,000 சுலோகங்கள் உடையவை.

இந்தப் பதினெட்டு ஆதிபுராணங்களையும் இயற்றியவர் வேதவியாசர். அவற்றுள் ஒன்றான பிரம்மவைவர்த்த புராணத்திலுள்ள கதைதான் சனீச்வரனால் விநாயகருக்கு யானைத்தலை ஏற்பட்ட வரலாறு.

இந்தப் பதினெட்டு ஆதிபுராணங்களைத் தவிர, பல காலங்களிலும் பல மகரிஷிகள் பதினெட்டு உபபுராணங்களை இயற்றினர். அவற்றில் ஒன்று பார்க்கவ புராணம் என்பது. பிருகு முனிவர் என்பவர் இதை இயற்றியதனால் அவருடைய பெயரைக் கொண்டு பார்க்கவ புராணம் என்று இது அழைக்கப்படலாயிற்று. இந்தப் புராணத்தின் நாயகன் கணபதி என்றும், கஜமுகன் என்றும், விக்னேச்வரன் என்றும் பல பெயர்களினால் வணங்கப்பெறும் பிள்ளையாராவார். ஆகவே, பார்க்கவ புராணத்தைக் கணபதி புராணம் என்றும், விநாயக புராணம் என்றும் கூறுவதுண்டு. இந்தப் புராண அடிப்படையில் காணபத்யம் என்ற தனிச்சமயக் கோட்பாடே உருவாகியுள்ளது. இந்தக் கோட்பாட்டைப் பின்பற்றுவோருக்கு விநாயகரே முழு முதற் கடவுள். மும்மூர்த்திகளுக்கும் மேற்பட்டவர். தேவர்களுக்கெல்லாம் தேவர்; ஆதிமுதற் கடவுள். அவருடைய பெருமையைத் தேவர்களோ மும்மூர்த்திகளோ அறியமாட்டார்கள். எல்லாத் தெய்வங்களுக்கும் மேலான தெய்வமாக, மும்மூர்த்திகளையும் இயக்குவிப்பவராக, ஏகப்பரம்பொருளாக விளங்குபவர் விநாயகரேயாவர். இதை நிலைநிறுத்துவதுதான் விநாயக புராணத்தை அடிப்படையாகக் கொண்ட காணபத்யம் என்ற

சமயக் கோட்பாட்டின் இலட்சியம். இந்த விநாயக புராணத்தில் விநாயகருக்கு யானை முகம் ஏற்பட்ட காரணத்தைப் பற்றிப் பின்கண்டவாறு ஒரு கதை தென்படுகிறது.

## செந்தூரனின் செருக்கு

ஒரு சமயம் பிரம்மதேவர் கொட்டாவி விட்டபொழுது அதிலிருந்து ஒரு மனிதன் தோன்றினான். "உங்கள் வாயிலிருந்து நான் தோன்றியபடியால் நான் உங்களுடைய புதல்வனாக வேண்டும். எனக்கு ஒரு பெயரும் வசிக்க இடமும் தந்தருளுக" என்று வேண்டினான்.

தமது புதல்வனிடம் அன்பு கொண்ட பிரமன், "மகனே! நீ செந்தூர நிறத்தில் இருப்பதனால் செந்தூரன் என்று உனக்குப் பெயரிடுகிறேன். மூவுலகத்தையும் உனக்குக் கொடுக்கிறேன். நீதி நேர்மையாக அரசாண்டு நல்ல பெயரெடுப்பாயாக. உனக்குத் திரிமூர்த்திகளினாலும் மரணம் ஏற்படாது. மனிதர்களோ விலங்குகளோ உன்னைக் கொல்ல முடியாது. யாரை நீ தழுவிக்கொண்டாலும் அவர் உடனே எரிந்து சாம்பலாகிவிடுவார். நான் கொடுத்த இந்த அரிய வரங்களை நீ நல்ல வழியில் உபயோகிக்க வேண்டும்" என்றார்.

தவம் செய்யாமலே தனக்கு ஒப்புயர்வற்ற இத்தனை வரங்கள் கிடைத்ததில் செந்தூரனுக்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை. அந்த வரங்கள் உண்மையா என்பதைப் பெற்ற தகப்பனிடமே பரீட்சித்துப் பார்க்க விரும்பிய செந்தூரன், பிரம்மாவைத் தழுவிக் கொள்ள நெருங்கினான். அவன் எண்ணத்தை அறிந்த பிரமன் அங்கிருந்து ஓட்டம்பிடித்து வைகுண்டத்தில் ஆதி ஆதிசேஷன் மீது பள்ளிகொண்டிருக்கும் பரந்தாமனிடம் தஞ்சம் புகுந்தார்.

ஆனால், விஷ்ணுவினால் பிரம்மாவுக்கு எவ்வித உதவியும் செய்ய முடியவில்லை. "செந்தூரனை நான் கொல்லமுடியாது. அவனை நான் கொன்றால், மும்மூர்த்திகளினாலும் மரணமில்லை என்று அவனுக்கு நீங்கள் கொடுத்த வரம் பொய்யாகிவிடும். உங்கள் வரத்தைப் பொய்யாக்காமலிருக்க நான் ஒரு வழி செய்கிறேன். பயப்படாமலிருங்கள்" என்று பிரம்மனுக்குத் தைரியம் கூறினார் திருமால்.

பிரம்மாவை விரட்டிக்கொண்டு வந்த செந்தூரன், திருமாலின் பக்கத்தில் பிரம்மனும் படுத்திருப்பதைக் கண்டான். தகப்பனை விட்டுத் திருமால்மீது அவன் கவனம் சென்றது.

"பரந்தாமா! உன்னைக் காக்கும் தெய்வம் என்கிறார்கள். பிறரைக் காப்பதன் முன்னால் உன்னைக் காத்துக்கொள்ள வழி இருக்கிறதா என்று பார். தைரியம் இருந்தால் என்னோடு யுத்தம் செய்ய எழுந்து வா! தூங்குவது போலப் பாசாங்கு செய்தால் உன்னை இலேசில் நான் விடமாட்டேன்" என்று கொக்கரித்தான்.

அவனைப் பார்த்துப் புன்முறுவல் செய்த திருமால், "செந்தூரா! நீ வீராதி வீரன் என்பதை நான் அறிவேன். ஒரு சிங்கம் சுண்டெலியைச் சண்டைக்கு அழைத்ததாக நீ கேள்விப்பட்டிருக்கிறாயா? பூனையை யானை சண்டைக்கு அழைத்ததைப் பார்த்திருக்கிறாயா? நாங்கள் இருவரும் பயந்துகொண்டு படுத்திருக்கிறோம். எங்களிடமா உன் வீரத்தைக் காட்டப் போகிறாய்? உண்மையாகவே நீ வீரனாக இருந்தால் உன் புஜபல பராக்கிரமத்தை நீ காட்டவேண்டியது பரமசிவனிடத்தில். இமயமலையிலே இன்னொரு பெரிய மலைமாதிரி அமர்ந்திருக்கும் சிவபிரான் மட்டுமே உன்னோடு சரிசமானமாக யுத்தம் செய்யத் தகுந்தவர். அதை விட்டு எங்களிடமா உன் பராக்கிரமத்தைக் காட்டுவது? சுத்தவீரனான உன் பெயருக்குக் களங்கம் ஏற்படுத்திக் கொள்ளாதே!" என்றார்.

இப்படித் திருமால் சொல்லவும், அதை உண்மை என்று நம்பி, கைலங்கிரியை நோக்கி ஆர்ப்பரித்துக்கொண்டு கிளம்பினான் செந்தூரன்.

கைலங்கிரிக்குச் செந்தூரன் வந்தபொழுது, சிவபெருமான் யோகநிஷ்டையில் இருந்தார். அவர் அருகில் அமர்ந்திருந்த உமாதேவியாரைக் கண்டதும், "இவளைப் போன்ற பேரழகி எந்த உலகத்திலும் இல்லை.

ஆகையால் எப்படியும் இவளைத் தூக்கிக் கொண்டு போய்விடவேண்டும்'' என்ற கெட்ட எண்ணம் தோன்றியது செந்தூர னுக்கு.

அன்னை பராசக்தியைத் தூக்கிச் செல்ல அந்தத் துராத்மா அவளை நெருங்கிய பொழுது, பார்வதி பயத்தினால் நடுங்கிச் சிவபிரானைக் கட்டிக்கொண்டாள். அவ ளுடைய ஸ்பரிசத்தினால் நிஷ்டை கலைந்த சிவபிரான், தனது நெற்றிக் கண்ணைத் திறந்து செந்தூரனைப் பார்த்தார்.

''மன்மதனை எரித்த மாதிரி என்னையும் எரித்துவிடலாம் என்று நினைத்தாய் போலும்! எனக்கு மும்மூர்த்திகளினாலும் மரணமில்லை. உன் நெற்றிக்கண் என்னை ஒன்றும் செய் யாது. பிரம்மாவும் திருமாலும் என்னிடம் பயந்து சரணாகதியடைந்து விட்டார்கள். நீயும் சரணாகதியடைந்து பார்வதியை என் னிடம் ஒப்படைக்கப் போகிறாயா? அல்லது என்னோடு சண்டை செய்ய வருகிறாயா'' என்று கேட்டான் செந்தூரன்.

சிவபிரான் கோபத்துடன் சூலாயுதத்தை எடுத்துக்கொண்டு எழுந்து வந்தார். அவரைத் தழுவிக்கொண்டு சாம்பலாக்க நெருங்கி வந்தான் செந்தூரன்.

இத்தனையையும் தமது ஞானதிருஷ்டியினால் பார்த்துக்கொண்டிருந்த சர்வலோகநாயக ராகிய விநாயகப்பெருமான், சிவனுக்கும் செந்தூரனுக்கும் இடையில் ஓர் அந்தணச் சிறுவராக வந்து தோன்றினார்.

''செந்தூரா! நான் சொல்லுவதைக் கேள். திரிமூர்த்திகளினாலும் உனக்கு மரணமில்லை. பிரம்மதேவன் வரமளித்தது உண்மைதான். அந்த வரத்தைப் பொய்யாக்காமலே உன்னை மாய்க்கத் திரிமூர்த்திகளுக்கு வழி தெரியும். எப்பொழுதோ வரப்போகும் சாவை இப் போதே தழுவிக் கொள்ளாதே. இங்கிருந்து ஓடிவிடு!'' என்று கூறிய விநாயகப்பெருமான் தமது மாயசக்தியினால் செந்தூரன் மனதில் புகுந்து அதை பேதலிக்கச் செய்தார். செந் தூரன் திரும்பிப்பாராமல் ஓடிவிட்டான்.

பார்வதிதேவி தன் மானத்தைக் காத்த அந்தணச் சிறுவனைப் பார்த்து, ''நீ யாரப்பா?'' என்று விசாரித்தாள். விநாயகப்பெருமான் தமது சொந்த உருவில் காட்சியளித்து, ''மலை மகளே! உன்னைக் கைப்பற்ற நினைத்த செந் தூரனை மாய்ப்பதற்கு உன் வயிற்றிலேயே நான் அவதரிக்கப் போகிறேன். இனி எவருக்கும் நீ அஞ்சத் தேவையில்லை'' என்று சொல்லிவிட்டு மறைந்தார்.

கைலயங்கிரியிலிருந்து பூலோகம் திரும்பிய செந்தூரன் தபஸ்விகளைக் கொடுமைப்படுத் தினான். அடிக்கடி தேவலோகம் போய்த் தேவர்களை இம்சித்தான். அவனுடைய கொடுமைகளைப் பொறுக்கமாட்டாத தேவர் கள் சர்வேசுவரனான விநாயகரை வழிபடவே, அவர் அவர்கள் முன்பு தோன்றி, ''செந் தூரன் அழியும் காலம் நெருங்குகிறது. பார்வதியின் வயிற்றில் நானே பிள்ளையாகப் பிறந்து, அவனைச் சங்கரிப்போம். கவலையை விடுக'' என்று திருவாய்மலர்ந்தருளினார்.

சில தினங்களில் அவர் உமாதேவியின் உதிரத்தில் கலந்து கருவானார். உமாதேவி கர்ப்பகாலத்தில் குளுமையான இடத்தில் போய்த் தங்கவேண்டும் என்று பரமேசுவர னிடம் சொல்ல, அவர்கள் இருவரும் பூலோகத்தில் மிகமிகக் குளுமையான ஒரு சோலையில் வந்து தங்கினர்.

அந்தச் சோலையில் உமாதேவியார் தமது பாங்கிகளுடன் உல்லாசமாகச் சுற்றித்திரிந்து களித்திருந்தார். சிவபெருமான் திரும்பவும் யோகநிஷ்டையில் ஆழ்ந்தார்.

ஒரு நாள் சிவபெருமானின் பக்தர்களிலே ஒருவனான கஜமுகாசுரன் என்பவன் அந்தப் பூஞ்சோலையில் புகுந்து அட்டகாசம் செய்ய ஆரம்பித்தான். பார்வதிதேவியார், அந்த அசுரனைப் பார்த்து பயந்து, சிவபிரானைத் தழுவிக்கொள்ளவே, சிவபிரான் கண்விழித் துப் பார்த்தார். மலை போன்ற ராட்சதயானை மதம் கொண்டு பூஞ்சோலையை அழிப்பதைக் கண்டு தமது சூலாயுதத்தை அவர் எடுத்து வீசினார். அந்தச் சூலாயுதம் கஜமுகாசுரனின்

(தொடர்ச்சி 299-ஆம் பக்கம் பார்க்க)



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

திங்கட்கிழமை, ஜூன் 4, 1883

**மணிலால்** (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்) : தினசரி பூஜை செய்யும்போது இறைவனை எந்த இடத்தில் தியானம் செய்யலாம்?

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** ஏன்? இதயம்தான் தியானத்திற்கு மிகவும் சிறந்த இடமாகும். தியானம் செய்யும்போது பகவான் இதயத்தில் வீற்றிருப்பதாக நினைத்துத் தியானம் செய்.

மணிலால் பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்தவர். அவர் கடவுளை அருவமாக வழிபடுபவர். (உருவம் இல்லாமல் வழிபடும் நிராகாரவாதி.)

**ஸ்ரீராமகிருஷ்ணர்** (மணிலாலிடம்): "உருவக் கடவுள் என் தாய்; அருவக் கடவுள் என் தந்தை; இவர்களுள் யாரை நான் பழித்துப் பேச முடியும்? யாரை நான் போற்றி வணங்க முடியும? இந்தத் தராசின் இரண்டு தட்டுக்களுமே சரிசமமாக இருக்கின்றன" என்று கபீர் சொல்வாராம்.

ஹலதாரி பகல்நேரங்களில் உருவக் கடவுளையும், இரவுநேரங்களில் அருவக் கடவுளையும் தியானிப்பது வழக்கம். இந்த இரண்டில் எந்த வழிபாட்டு முறையை ஒருவன் பின்பற்றினாலும் சரிதான். ஆனால் இந்த இரண்டில் தான் பின்பற்றும் வழிபாட்டு முறையில் ஒருவன் முழு அளவில் நம்பிக்கை மட்டும் கொண்டிருந்தால் போதுமானது; அப்படிச் செய்தால் அவன் கடவுளை அடைவது நிச்சயம். நீ உருவக் கடவுளிடம் வேண்டுமானாலும் நம்பிக்கை வைக்கலாம், அல்லது அருவக் கடவுளிடம் வேண்டுமானாலும் நம்பிக்கை வைக்கலாம். ஆனால் உன்னுடைய அந்த நம்பிக்கை முழு அளவில் உண்மையானதாகவும் இதயபூர்வமானதாகவும் உறுதி வாய்ந்ததாகவும் மட்டும் இருக்க வேண்டும்.

சம்பு மல்லிக் கல்கத்தாவிலுள்ள பாக்பஜார் என்ற இடத்திலிருந்து, கால்நடையாக நடந்தே தட்சிணேசுவரத்திலிருக்கும் தமது தோட்டத்திற்கு வருவது வழக்கம். ஒரு நாள் யாரோ அவரது நண்பர் ஒருவர், "இப்படி நீண்ட தூரம் நடந்தே வருகிறீர்களே! ஒரு வண்டி வைத்துக்கொண்டு வரக்கூடாதா? இவ்வளவு தூரம் நடந்து வரும்போது வழியில் ஏதாவது ஆபத்து ஏற்படலாம் அல்லவா?" என்று கேட்டார். அதைக் கேட்டவுடனே சம்பு மல்லிக்கின் முகம் கோபத்தால் சிவந்து விட்டது. கோபத்தோடு அவர், "நீங்கள் என்ன பேச்சுப் பேசுகிறீர்கள்? நான் பகவானின் நாமத்தை ஜபித்தபடியே வெளியே கிளம்புகிறேன்! அப்படி இருக்கும்போது எனக்கு என்ன ஆபத்து ஏற்பட முடியும்?" என்று பதில் கொடுத்தார்.

கடவுளிடம் ஆழ்ந்த நம்பிக்கை கொள்வதனாலேயே ஒருவனுக்குத் தேவையானது அவ்வளவும் கிடைத்துவிடும். நம்பிக்கையில் தான் எல்லாமே இருக்கிறது. "இன்னாரை நான் பார்க்கும்படி நேர்ந்தால், அப்போது தான் என் தெய்விக அனுபவங்கள் யாவும் உண்மையானவை என்று கருதுவேன் என்று நான் நினைத்துக்கொள்வேன் அல்லது, இங்கே கோவிலில் அதிகாரியாக இருக்கும் குறிப்பிட்ட இந்த நபர் என்னிடம் வந்து பேசுவாரானால், அப்போதுதான் என் தெய்விக அனுபவங்கள் எல்லாம் உண்மையானவை என்று கருதுவேன்"—என்ற விதங்களில் எனக்குள் நான் நினைத்துக்கொள்வேன். அவ்விதம் நான் நினைத்தவை எல்லாம் தவறாமல் அப்படியே நடந்தேறும்!

ம—ஆங்கிலத் தர்க்க சாஸ்திரம் (English Logic) படித்தவர். அதில் அவர், 'விடியற் காலை நேரத்தில் கனவு கண்டால் அது பலிக்கும் என்பது மூட நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டது' என்று படித்திருந்தார். ஆகவே ம—பின்வருமாறு குருதேவரிடம் வினவினார் :—

ம—: நீங்கள் நினைத்தவற்றில் ஒன்றுகூடத் தவறாமல் அப்படியேவா நடந்தேறியது? நீங்கள் நினைத்து நடைபெறாமற்போன சம்பவங்கள் ஏதாவது இருந்தது உண்டா?

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** இல்லவே இல்லை. நினைத்து நடைபெறாமல் போயிற்று என்று சொல்லத்தக்கதாக ஒரே ஒரு சந்தர்ப்பங்கூட எனக்கு மருந்துக்கும் ஏற்பட்டதில்லை. அந்தச் சமயத்தில் நான் நினைத்தது நினைத்தபடி எல்லாமே நடந்தேறியது. அந்தக் காலத்தில் பகவானின் நாமத்தை ஜபித்து, இன்னது நடைபெற வேண்டும் என்று எனக்குள் நினைத்துக் கொள்வேன். அவ்விதம் நினைத்தது தவறாமல் அப்படியே நடந்தது!

(மணிலாலிடம்) ஆனால் ஓர் உண்மையைச் சொல்ல வேண்டும். கள்ளங்கபடமற்ற தன்மையும் உதாரமான குணமும் இல்லாவிட்டால், அத்தகைய ஆழ்ந்த நம்பிக்கை (மகா விச்வாஸம்) ஏற்படுவதில்லை. எலும்புக்கூடு தெரிவதைப் போன்ற உடல், குழி விழுந்த கண்கள், ஓரக்கண் பார்வை இவை போன்ற பல அறிகுறிகள் இருக்கின்றன. இத்தகைய லட்சணங்களைக் கொண்டிருப்பவர்களுக்குச் சுலபத்தில் மகா விச்வாஸம் ஏற்படுவதில்லை. தென்திசையில் வாழைமரம், வடக்குத்திசையில் பனையோலை, அதோடு ஒரு கறுப்புப் பூனை என்று இப்படியெல்லாம் இருந்தால் நண்பனே, நீ என்ன செய்வாய்?* (எல்லோரும் சிரித்தனர்.)

மாலைநேரம் நெருங்கியது. வேலைக்காரி ஸ்ரீராமகிருஷ்ணரின் அறைக்குள் நுழைந்து அங்கே சாம்பிராணிப் புகையைப் போட்டுவிட்டுச் சென்றாள். மணிலால் முதலிய பக்தர்கள் விடைபெற்றுச் சென்ற பிறகும், அந்த அறையில் இன்னும் இரண்டொரு பக்தர்கள் இருந்தார்கள். அறையில் முழு அளவில் அமைதி நிலவிக்கொண்டிருந்தது. சாம்பிராணிப் புகையின் வாசனை அங்கே கமழ்ந்து கொண்டிருந்தது. பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் சிறிய கட்டிலின்மீது அமர்ந்தபடி ஜகன் மாதாவை ஆழ்ந்து தியானிப்பதில் ஈடுபட்டிருந்தார். ம—தரையில் உட்கார்ந்திருந்தார். ராக்காலும் அங்கு அவருடன் இருந்தார்.

சிறிது நேரம் கடந்தபிறகு கோவில் சொந்தக்காரரின் பழைய வேலைக்காரியாகிய பகவதி என்பவள் அங்கு வந்தாள். அவள் அறைக்குள் நுழைந்து மிகவும் தூரத்திலிருந்தே குருதேவரை வணங்கினாள். குருதேவர் அவளை உட்காரச் சொன்னார். பகவதி மிகவும் பழைய வேலைக்காரி. கடந்த பல ஆண்டுகளாக அவள் மதுரபாபு குடும்பத்தினரின் வீட்டில் இருந்து வந்தாள். குருதேவருக்கு அவளை நீண்ட காலமாகத் தெரியும். இளமைப் பருவத்தில் அவளுடைய

---

* இது அபசகுனத்தைக் குறிப்பிடும் ஒரு வங்காளப் பழமொழி ஆகும். அதன் கருத்து வருமாறு : தெற்கில் ஓர் அபசகுனம், வடக்கில் இன்னொரு கெட்ட சகுனம், மற்றொரு பக்கத்தில் வேறு ஓர் அமங்கலக் காட்சி என்று எல்லாத் திசைகளிலும் அபசகுனங்களே தென்படுமானால் ஒரு மனிதன் என்னதான் செய்ய முடியும்?

நடத்தை அவ்வளவாகச் சரியாக இருக்க வில்லை. ஆனால் கருணைக்கடலான (தயைக ஸிந்து) குருதேவர் பாவிகளையும் புனித மாக்குபவர் (பதிதபாவனர்). அவர் அந்த வேலைக்காரியுடன் பேச ஆரம்பித்தார்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்** : இப்போது உனக்கு வயதாகிவிட்டது. நீ சேர்த்து வைத்திருக்கும் பணத்தைச் சாதுக்களுக்கும் வைஷ்ணவர் களுக்கும் (பக்தர்களுக்கும்) உணவளிப்பது போன்ற தொண்டு செய்வதில் செலவழித்து வருகிறாயா?

**பகவதி** (புன்சிரிப்புடன்): அதைப்பற்றி நான் எப்படிச் சொல்வது?

**ஸ்ரீராமகிருஷ்ணர்** : காசி, பிருந்தாவனம் போன்ற புண்ணிய க்ஷேத்த்ரங்களுக்கெல் லாம் நீ போய் வந்தாயா?

**பகவதி** (கூச்சத்துடன் தலைகவிழ்ந்தபடி) : அதைப்பற்றி நான் எப்படிச் சொல்வது? மக்கள் நீராடுவதற்கு உரிய ஸ்நானகட்டம் ஒன்று கட்டி வைத்திருக்கிறேன். அதன் படிக் கட்டில் என் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது.

**ஸ்ரீராமகிருஷ்ணர்** : அப்படியா!

**பகவதி** : ஆமாம், பெயர் பொறிக்கப் பட்டுத்தான் இருக்கிறது. 'ஸ்ரீமதி பகவதி அம் மாள்' என்று என் பெயர் அங்கே செதுக்கப் பட்டுள்ளது.

**ஸ்ரீராமகிருஷ்ணர்** (புன்சிரிப்புடன்): பேஷ்! பேஷ்!

இந்தச் சமயத்தில் பகவதி தைரியம் கொண்டவளாய், ஸ்ரீகுருதேவரின் பாதங் களைத் தொட்டு வணங்கிவிட்டாள்! தேள் கொட்டிவிட்டால் ஒரு மனிதன் எப்படி நிலை தடுமாறித் துடிதுடித்துக் குதித்தெழுந்து நிற் பானோ, அது போல ஸ்ரீராமகிருஷ்ணர் நிலை தடுமாறி, "கோவிந்தா! கோவிந்தா! கோவிந்தா!" என்று பகவானின் நாமத்தை உச்சரித்தபடியே எழுந்து நின்றுவிட்டார். அறையின் ஒரு மூலையில் கங்கைநீர் கொண்ட ஒரு ஜாடி வைக்கப்பட்டிருந்தது. மூச்சுத் திணறியபடி அவர் விரைந்து அந்த ஜாடி இருந்த இடத்தை அடைந்தார். பகவதி பாதத்தில் எந்த இடத்தைத் தொட்டிருந் தாளோ அந்த இடத்தைக் கங்கைநீரைக் கொண்டு கழுவ ஆரம்பித்தார்.

அறையில் இருந்த இரண்டொரு பக்தர்கள் பேச்சுமூச்சு இல்லாமல் இந்த நிகழ்ச்சியை வியப்புடன் பார்த்துக்கொண்டிருந்தனர். பகவதியோ தன் உயிரே போய்விட்டதைப் போன்று உட்கார்ந்து கிடந்தாள்.

கருணைக்கடலாகவும் பெரும் பாவிகளையும் புனிதப்படுத்தும் தெய்வமாகவும் விளங்கிய பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், பகவதியை நோக்கிக் கருணை பொங்க, "நீ அங்கிருந்தே வணக்கம் செய், போதும்" என்று அவளுக்கு ஆறுதல் தரும் வகையில் கூறினார். அவ்விதம் சொல்லிவிட்டு அவர் மீண்டும் பழையபடி சிறிய கட்டிலின்மீது அமர்ந்துகொண்டு நடந்த நிகழ்ச்சியைப் பகவதி மறந்து அவள் ஆறுதல் பெறுவதற்காக ஒரு காரியம் செய் தார். அதாவது, குற்ற உணர்ச்சியிலிருந்தும் தர்மசங்கடமான அந்த நிலையிலிருந்தும் பகவதி விடுபட்டு ஆறுதல் பெறும்பொருட்டு, "கொஞ்சம் பாட்டுப் பாடுகிறேன், கேள்" என்று அவளிடம் சொல்லிவிட்டுப் பாடல் களைத் தாம் பாடி அவளைக் கேட்கும்படி செய்தார். ×

---



முன்னொரு சமயம் தாயுமானவருக்கு அரசன் விலையுயர்ந்த சால்வையை இனாம் கொடுத்தார். அவர் உடனே அதை ஓர் ஏழைப் பறைச்சிக்குக் கொடுத்துவிட்டார். அரசன் சினம் கொண்டு தாயுமானவரை நோக்கி, "உனக்குக் கொடுத்த சால்வை எங்கே?" என்று கேட்க தாயுமானவர், "அதை நான் அகிலாண்டேசுவரிக்குத் தந்துவிட்டேன்" என்றார்.

—**ஞானதரினி –1**



# ஸ்ரீராமகிருஷ்ண மடம் - சங்கம் இவைகளின் உலகம் தழுவிய மாநாடு

ஸ்ரீமத் சுவாமி வீரேச்வரானந்தஜி மகராஜ்

தலைவர், ஸ்ரீராமகிருஷ்ண மடம்-சங்கம்.

**உலக** வரலாற்றின் காலகட்டத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் தோற்றம் முன்பு எப்போதும் காணாத அளவில் ஆன்மிக ஆற்றல் உலகெங்கும் பெருக்கெடுத்துப் பாய வாயில்களைத் திறந்துவிட்டது.

இந்த ஆன்மிக ஆற்றல் மனித சமுதாயத்தின் நன்மைக்குப் பயன்படவும், புராதனமானதும், உலக தெய்விகத்தின் அடிப்படையானதுமான இந்திய ஆன்மிகக் கொள்கைகளுக்கு இன்றைய சூழ்நிலைக்கு ஏற்ப, புதிய விளக்கங்களையும், அளவற்ற ஆற்றலையும் தரும் தன் புத்தம்புதிய ஆன்மிக உலகம் முழுவதும் பாய்வதற்கான வாய்க்காலை உருவாக்கவும், ஸ்ரீராமகிருஷ்ணர் தம்மிடம் வந்தவர்களில் சுவாமி விவேகானந்தரைத் தலைவராகக் கொண்ட தங்கள் வாழ்வையே அர்ப்பணித்துவிட்ட சில இளைஞர்களைத் தம் சீடர்களாகத் தேர்ந்தெடுத்தார்.

இது இந்தியாவின் புதுவாழ்விற்கு மட்டுமல்லாமல் அப்போது உலகையே விழுங்கிக் கொண்டுவந்த "கடவுள் என்பதே இல்லை; உலகவாழ்வே எல்லாம்" என்னும் லௌகிகக் கொள்கையை (Materialism) எதிர்க்கவும் அவசியமாக இருந்தது. ஸ்ரீராமகிருஷ்ணரின் இந்தக் கொள்கைகளை உலகம் முழுவதும் பரப்ப ஸ்ரீராமகிருஷ்ணரின் மறைவிற்குப் பிறகு, சுவாமி விவேகானந்தர் 1886-ஆம் ஆண்டு இரண்டுவேறுபட்ட காலங்களில் 'ஸ்ரீராமகிருஷ்ணமடம், ஸ்ரீராமகிருஷ்ண சங்கம்' என்னும் இரண்டு அமைப்புகளைத் துவக்கினார். இந்த இரண்டு அமைப்புகளையும் ஸ்ரீராமகிருஷ்ணரின் கொள்கைகளை, மக்கள் அன்றாட வாழ்வில் கடைப்பிடிப்பதற்கான வழியையும் வாயிலையும் தரும் கருவியாக அவர் முறைப்படுத்தினார்.

இந்த அமைப்பிற்கான சட்டதிட்டங்களை உருவாக்கும்போது சுவாமி விவேகானந்தர், "வீழ்ந்து கிடக்கும் இன்றைய பாரதம் மறுபடியும் விழித்தெழ வேண்டும். இந்த மடத்திலிருந்தும் சங்கத்திலிருந்தும் பொங்கி எழும் தெய்விக அலை கங்கு கரையில்லாத வெள்ளமாகப் பாய்ந்து, மனித சமுதாயத்தையே மூழ்கடித்து, துன்பம் துயரம் இவைகளை எல்லாம் கடந்து பேரானந்தத்தின் வாயில்களுக்கு மக்களை அழைத்துச் செல்ல வேண்டும். இந்த மடம் சங்கத்தை ஆரம்பிப்பதின் நம்பிக்கை இதுதான். தலைமுறை தலைமுறையாக இந்தக் காரியம் நம்முடைய சீடர்கள் மூலம் தொடர்ந்து நடைபெற நாம் அனைவரும் வரிந்து கட்டிக்கொண்டு செயலில் இறங்க வேண்டும்" என்று கூறினார்.

1902-ஆம் ஆண்டில் சுவாமி விவேகானந்தர் மறைந்தபோது, இந்த இரண்டு அமைப்புகளும் நல்ல நிலையில் தொண்டாற்றிக் கொண்டிருந்தன. அப்போது

---

ஸ்ரீராமகிருஷ்ண மடம் - சங்கம் ஆகியவற்றின் இரண்டாவது மாநாடு நடைபெற இருப்பதை முன்னிட்டு, பூஜ்ய ஸ்ரீமத் சுவாமி வீரேச்வரானந்தஜி மகராஜ் அவர்கள் அளித்த செய்தி இங்கு கட்டுரை வடிவில் இடம் பெறுகிறது.

எட்டு இடங்களில் மட்டுமே அதற்கான கிளை அமைப்புகள் இருந்தன. அதன் பிறகு நாட்கள் செல்லச்செல்ல கிளை அமைப்புகளின் எண்ணிக்கையும், அதுபோல அவைகளின் வேலையின் அளவும் வளர்ந்துகொண்டே வந்தன. 1926-ஆம் ஆண்டில் சுவாமி விவேகானந்தர் மறைந்த இருபது ஆண்டுகளுக்குப் பிறகு உலகம் முழுவதும் ஏறக்குறைய 64 கிளை அமைப்புகள் உருவாகி இருந்தன. அந்த நேரத்தில் இந்த அமைப்புகள் ஆற்ற வேண்டிய பணிகள் பலவேறுபட்டதாகவும் பலவகையான சிக்கலும், கடினமும் நிறைந்ததுமாக யாறிவிட்டன. எனவே அப்போது, அன்றைய சூழ்நிலையில் மடம், சங்கங்களின் செயல்பாட்டினை ஆராய்ந்து, அதற்குத் தக்கபடி சட்டதிட்டங்களை உருவாக்குவது தேவையானதாக இருந்தது. அதற்காக 1927-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் மடம், சங்கம் இவைகளின் உறுப்பினர்களான சன்னியாசிகளும், இல்லறவாசிகளும், உறுப்பினரில்லாத ஸ்ரீராமகிருஷ்ண–விவேகானந்த பக்தர்களும், அன்பர்களும் பங்கெடுத்துக்கொள்ளும் மாநாடு ஒன்று கூட்டப்பட்டது. அந்த மாநாடு மிகுந்த வெற்றியாகவும் வரலாற்று நிகழ்ச்சியாகவும் அமைந்தது; மடம்–சங்கங்களின் எதிர்கால வளர்ச்சிக்கு பயனுள்ள பலவேறு தீர்மானங்களும் முடிவுகளும் அதில் எடுக்கப்பட்டன.

அந்த மாநாட்டிற்குப் பிறகு இப்போது ஏறகுறைய 54 ஆண்டுகள் கழிந்துவிட்டன. இந்த இடைப்பட்டகாலத்தில் மடமும் சங்கமும் அளவிலும், செயல் முறையிலும் மிகப் பெரிய அளவ்ல் வளர்ந்துவிட்டன. இப்போது 138 அமைப்புகள் உலகம் முழுவதும் பெருகியுள்ளன. இந்த நிலையில் இன்றைய இந்தியாவின் அரசியல் சமூக் அமைட்பின் மாறுதல் காரணமாகவும், உலக அரசியல் சமூக அமைப்பின் மாறுதல் காரணமாகவும், மடம்-சடங்களின் வேலைப்பாடுகளுக்கு எதிராக பலவேறு பிரச்னைகள் உருவாகியுள்ளன. இவைகளைத் தீர்க்கவும், மடம்-சங்கங்களின் பணிகளை மேலும் சிறப்பாக அமைக்கவும், ஸ்ரீராமகிருஷ்ணர் எந்த இலட்சியங்களை உலகில் பரப்ப வாழ்ந்தாரோ அவைகளைக் காக்கவும், அவைகளை மேலும் மேலும் பரப்பவும், அவருடைய பக்தர்கள் அன்பர்களுக்கிடையே ஒற்றுமையும் ஒருங்கிணைந்த உணர்வும் மிகவும் அவசியமாகும்.

இதற்காக அனைவரும் ஒன்று கூடவும், பிரச்னைகளை விவாதிக்கவும், அவைகளைத் தீர்க்கும் வழிகளைக் காணவும், மடத்திற்கும் சங்கத்திற்கும் தேவையானபுதியவிதிகளையும் வழிமுறைகளையும் இயற்றவும், மேன்மேலும் நாம் அனைவரும் சுவாமி விவேகானந்தரால் ‘பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் உடம்பே அன்றி வேறல்ல’ என்று கூறப்பட்ட மடம்-சங்கங்களுக்காக நம்மை அர்ப்பணித்துக் கொள்ளவும் ஒரு கருத்தரங்கு தேவைப் படுகிறது. இத்தகைய கருத்தரங்கை உருவாக்குவதற்காக மடம் சங்கங்களின் மாநாடு ஒன்றை இரண்டாவதாக மறுபடியும் 1980-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் கடைசி வாரத்தில் பேலூரில் கூட்டும் எண்ணம் உருவாகியது.

அதற்காக சுவாமி ஹிரண்மயானந்தர் அவர்களைத் தலைவராகவும், சுவாமி வந்தனானந்தர் அவர்களைத் துணைத்தலைவராகவும், சுவாமி லோகேஸ்வரானந்தர் அவர்களைச் செயலாளராகவும் கொண்டு ஒரு செயற் குழு அமைக்கப்பட்டுள்ளது. அதன் அலுவலகம் Sri Ramakrishna Mission Institute of Culture, Golpark, Calcutta–29 என்ற முகவரியில் அமைந்துள்ளது. இந்த மாநாடு பெரும் வெற்றியோடு நடைபெற, மகோன்னத புருஷராகிய ஸ்ரீராமகிருஷ்ணரின் தெய்வீக உபதேசங்களில் நம்பிக்கைக் கொண்டுள்ள அனைவரும் இந்தச் செயற் குழுவிற்குப் பணமாகவும், மற்ற எல்லா வகையிலும் முடிந்த உதவிகளைச் செய்யவேண்டும். எனவே நீங்கள் அனைவரும் தாமாக முன்வந்து இந்த மாபெரும் முயற்சியில் உங்களால் ஆன எல்லா உதவிகளையும் செய்து, மனித சமுதாயத்தை சுவாமி விவேகானந்தர் கண்ட இலட்சிய வாழ்விற்கு அழைத்துச் செல்லும் நம் மடம் சங்கங்களை வலிமைப் படுத்தும்படி வேண்டுகிறேன்.




## மணிகர்ணிகையில் கண்ட காட்சி

காசியில் கங்கைக்கரையின் மீது அமைந்திருக்கும் கோவில்களைத் தரிசிக்கும் பொருட்டு மதுர்பாபு குருதேவரை அடிக்கடி படகில் அழைத்துச் செல்வது வழக்கம்.

காசியில் கங்கைக் கரையிலுள்ள தீர்த்த கட்டங்களை 'காட்' என்று வழங்குகிறார்கள். காசியில் இவ்விதம் மொத்தம் அறுபத்து நான்கு தீர்த்தகட்டங்கள் இருக்கின்றன.

இமயத்திலிருந்து தெற்குநோக்கிப் பாயும் கங்கை, காசியில் மட்டும் உத்தரவாகினியாக அதாவது வடக்குநோக்கிப் பாய்கிறது. இவ்விதம் தன் இயல்புக்கு மாறாகக் கங்கை காசியில் வடக்குநோக்கிப் பாய்வதனால், காசிக்கு மகிமை கூடுவதோடு கங்கைக்கும் அங்கு மதிப்புக் கூடுகிறது என்கிறார்கள். 'பகீரதன் தவம்செய்து கங்கையைப் பூவுலகத்திற்கு அழைத்து வருவதற்கும் முன்பே கங்கை இருந்தது; மண்ணுலகத்திற்கு வந்த கங்கை, காசியின் மகிமையைப் பற்றிக் கேள்வியுற்று இந்த க்ஷேத்திரத்தைத் தரிசிப்பதற்காகவே காசிக்கு வந்தது' என்று பௌராணிகர்கள் கூறுகிறார்கள்.

காசியில் உத்தரவாகினியாகப் பாயும் கங்கையின் வடக்கில் வருணை என்ற நதியும், தெற்கில் அஸி என்ற நதியும் சங்கமமாகிக் கலக்கின்றன. இவ்விதம் கங்கையில் வருணை நதி சங்கமத்திற்கும் அஸி நதி சங்கமத்திற்கும் இடையில் உட்பட்டிற்கும் பகுதியே வாராணசி எனப்படுகிறது.

காசியிலுள்ள எல்லாத் தீர்த்த கட்டங்களுமே முக்கியமானவைதாம். அவற்றுள்ளும் ஐந்து தீர்த்த கட்டங்களை விசேஷமாகச் சிறப்பித்துக் கூறுகிறார்கள். அவை முறையே அஸி காட், தசாச்வமேத காட், மணிகர்ணிகை காட், பஞ்சகங்கா காட், வருணைசங்கம காட் என்று அழைக்கப்பெறுகின்றன. இந்த ஐந்து தீர்த்த கட்டங்களையும் காசியாத்திரை மேற்கொள்ளும் பக்தர்கள் விசேஷமாகச் சென்று தரிசிக்கிறார்கள்.

அந்த வழக்கத்தையொட்டிச் சிறப்பு வாய்ந்த இந்த ஐந்து தீர்த்த கட்டங்களுக்கும் ஸ்ரீ ராமகிருஷ்ணரை மதுரபாபு படகில் அழைத்துச் சென்றார்.

அவர்கள் சென்ற படகு மணிகர்ணிகை கட்டத்தை நெருங்கிக்கொண்டிருந்தபோது அங்குள்ள மயானத்தில் இறந்துபோன மனித உடல்கள் எரிந்து கொண்டிருந்தன. அது காரணமாக அந்த இடத்தில் எரியும் சடலத்திலிருந்து மேலே புகை கிளம்பிக்கொண்டிருந்தது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் அங்கு எரிந்து கொண்டிருந்த பிரேதங்களைப் பார்த்தாரோ இல்லையோ, உடனே தெய்விகப் பரவசத்தில் ஆழ்ந்தார் ; அவரது உடலில் மயிர்க்கால்கள் குத்திட்டு நின்றன. படகில் கூரை வேய்ந்தது

போன்று மூடியிருந்த இடத்தில் அமர்ந்திருந்த அவர், அங்கிருந்து எழுந்து ஆனந்தம் பொங்கப் படகின் விளிம்புக்கு விரைந்தோடி நின்றபடியே சமாதிநிலையில் ஆழ்ந்து விட்டார். படகில் மதுரநாதருக்கு வழிகாட்டியாக வந்திருந்த ஒரு பண்டா (பூசாரி)வும் படகோட்டியும், விரைந்து சென்று அவர் ஆற்றில் விழுந்துவிடாமல் தடுப்பதற்காக ஓடினர். ஆனால் ஸ்ரீ ராமகிருஷ்ணர் படகின் விளிம்பில் சற்றும் அசைவின்றிச் சமாதி நிலையில் நின்றுவிட்டதால் அவருக்கு ஒரு வரது உதவியும் தேவைப்படவில்லை.

நிலைதடுமாறி ஸ்ரீராமகிருஷ்ணர் ஆற்றில் விழுந்துவிடாமல் பாதுகாப்பதற்காக அவருடைய இரண்டு பக்கங்களிலும் இருதயும் மதுரபாபுவும் காவலாக நின்றனர்.

நின்றபடியே சமாதிநிலையில் ஆழ்ந்திருந்த ஸ்ரீ ராமகிருஷ்ணரின் முகத்தில் தெய்விகப் புன்னகை தவழ்ந்து கொண்டிருந்தது. படகில் அமர்ந்திருந்த மற்ற அனைவரும் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அந்த நிலையை வைத்த கண் வாங்காமல் வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தனர். இவ்விதம் சில நிமிடம் வரை சமாதிநிலையில் ஆழ்ந்திருந்த அவருக்குச் சிறிது நேரத்திற்குப் பிறகு மெல்ல மெல்ல உலகநினைவு திரும்பியது.

பிறகு படகு மணிகர்ணிகை கட்டத்தை அடைந்தது. அங்கு மதுரபாபு கோஷ்டியினர் அனைவரும் நீராடினர். அதன்பின் அவர்கள் மணிகர்ணிகை கட்டத்தில் தாங்கள் செய்ய நினைத்திருந்த வைதிகச் சடங்குகளையும் தானம் முதலியன வழங்குவதையும் முடித்துக்கொண்டனர். பிறகு படகில் ஏறி மேற்கொண்டு தாங்கள் தரிசிக்க இருந்த இடங்களுக்குச் சென்றுவிட்டுத் தமது இருப்பிடம் திரும்பினர்.

இருப்பிடம் திரும்பியதும், அன்றைய தினம் தாம் கண்ட ஞானக்காட்சியைப் பற்றி மதுரபாபு உட்பட அனைவருக்கும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பின்வருமாறு கூறினர் :—

"வெண்ணிற உடலும் செஞ்சடை முடியும் கொண்ட உயரமான ஒருவர் (காசி விசுவநாதர்) சடலங்கள் எரிந்துகொண்டிருந்த ஒவ்வொரு சிதையையும் பெருங் கருணையுடன் மெல்ல அணுகி, சிதையிலுள்ள ஜீவனை மேலே உயர்த்தி, அதன் செவிகளில் தாரக மந்திரத்தை ஓதியருளக் கண்டேன். சிதையின் மறு பக்கத்தில் சர்வசக்தி வாய்ந்த ஜகன்மாதாவாகிய அம்பிகை, அந்த ஜீவனின் கர்மவினையால் விளைந்த பந்தங்களாகிய (பழைய சம்ஸ்காரங்களாகிய) எல்லாக் கட்டுக்களையும் — ஸ்தூலம், சூட்சுமம், காரண நிலையில் (முக்தி அடைவதற்குத் தடையாக) உள்ள மறைப்புக்கள் எல்லாவற்றையும் — ஒவ்வொன்றாகத் துண்டித்துக் களைந்தெறிந்து, நிர்வாணம் எனப்படும் முக்தியாகிய வீட்டின் மணிக்கதவைத் தானே தன் கைகளாலேயே திறந்து, அதிர்ஷ்டசாலியான அந்த ஜீவனைப் பிரம்மத்தை நோக்கி விரைந்து செலுத்தி வந்தாள். இவ்விதம் எண்ணற்ற பிறவிகளில் பல்லாயிரம் ஆண்டுகள் கடுந்தவமும் யோகமும் பயின்ற பிறகு மட்டுமே அடையப்படும் எல்லையற்ற பேரின்பமாகிய அத்வைத மெய்ஞ்ஞான அனுபவம், காசி விசுவநாதரின் எல்லையற்ற கருணையால் காசியில் இறந்துபோகிறவர்களுக்கு உடனுக்குடன் அப்போதே எளிதில் கிடைத்துவிடுகிறது. இவ்விதம் விசுவநாதர் ஜீவாத்மாவின் வாழ்க்கையைப் பரிபூரணம் பெறச் செய்கிறார்."

ஸ்ரீ ராமகிருஷ்ணர் இவ்விதம் சொன்னதைக் கேட்டு மதுரபாபுவுடன் வந்திருந்த பெரும் பண்டிதர் அனைவரும் ஆச்சரியத்துடன், "கந்தபுராணத்தின் ஒரு பகுதியாகிய காசிகண்டத்தில், 'காசியில் இறந்துபோகிறவர்களுக்கு சிவபெருமான் முக்தி வழங்குகிறார்' என்று சொல்லப்பட்டிருக்கிறது ; ஆனால் அது எவ்விதம் நிகழ்கிறது என்பது காசிகண்டத்தில் தெளிவாகக் கூறப்படவில்லை. தாங்கள் கண்ட ஞானக்காட்சியோ அதை மிகவும் தெளிவாக விளக்குகிறது. தங்களது ஆன்மிக அனுபவம் ஆச்சரியப்

படத் தக்க வகையில் சாஸ்திர உண்மை களையும் கடந்திருக்கிறது'' என்று தெரி வித்தனர்.

மணிகர்ணிகை கட்டத்தில் தாம் பெற்ற ஞானக்காட்சியைப் பற்றி ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது சீடர்களிடம் பலவேறு சந்தர்ப்பங் களில் கூறியுள்ளார் என்று சுவாமி சாரதா னந்தர் குறிப்பிட்டிருக்கிருர். அது தவிர, 'ஸ்ரீ ராமகிருஷ்ண கதாமிர்தம்' என்ற நூலில் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் வாய்மொழியாகப் பின் வருமாறு காண்கிறது —:

"காசியில் இறந்துபோகிறவர் எவராக இருந்தாலும் – அவர் பிராம்மணனுயினும் சரி, வேசியாயினும் சரி — பரமசிவனுக ஆகிருர்கள்."

— ஜூன் 17, 1883

"காசியில் இறந்துபோகும் சமயத்தில் ஒருவனுக்குச் சிவபெருமானின் தரிசனம் கிடைக்கிறது. சிவபெருமான் அந்த ஜீவ னிடம், 'இது என் உருவத்தோடு கூடிய நிலை (சகுணப் பிரம்மம்) ஆகும். இந்த என் வடிவம் மாயையைக் கொண்டு (என்னல்) தோற்றுவிக்கப்பட்டதாகும். பக்தர்களுக் காக நான் இந்த உருவத்தை ஏற்கிறேன். இதோ கவனி, நான் இப்போது அகண்ட சச்சிதானந்தத்தில் ஐக்கியமாகிக் கொண் டிருக்கிறேன்' – இவ்விதம் சொல்லியபடியே சிவபெருமான் தமது உருவத்தைச் சச்சிதா னந்தத்தில் கரையும்படி செய்து, இறந்து கொண்டிருக்கும் ஜீவனைப் பிரம்மத்தைத் தரிசிக்கும்படி செய்கிருர்."

— அக்டோபர் 2, 1884

"நான் மதுரபாபுவுடன் காசிக்குச் சென் றிருந்தேன். நாங்கள் இருந்த படகு மணி கர்ணிகையைக் கடந்துகொண்டிருந்தது. அப்போது திடீரென்று எனக்குச் சிவதரிசனம் கிட்டியது. நான் படகின் விளிம்பில் நின்ற படியே சமாதிநிலையில் ஆழ்ந்துவிட்டேன். நான் ஆற்றில் விழுந்துவிடுவேனே என்று பயந்த படகோட்டி, 'அவரைப் பிடி! அவரைப் பிடி!' என்று ஹ்ருதயை நோக்கிக் கத்தினன். அந்த மணிகர்ணிகை கட்டத் தில் சிவபெருமான் ஆழ்ந்த சிந்தனையுடன் நின்றுகொண்டிருந்ததைப் பார்த்தேன். பட கிலிருந்து சிறிது தூரத்தில் சிவபெருமான் நின்றுகொண்டிருந்ததை முதலில் கவனித் தேன். பிறகு அவர் என்னை நோக்கி நெருங்கி வந்து முடிவில் என்னிடமே ஐக்கியமாகி விட்டார்."

— ஜூலை 14, 1885

**ஆண்டவனைப்** பற்ருதே. அவன் அடியார்களைப் பற்று. ஆண்டவன் நிதியும் நிலமும்தான் தருவான். அடி யார்களோ அவனையே தருவார்கள்.

— கபீர்தாசர்

**எப்போதும்** நாம் படிக்கும்போது பிறருக்குச் சத்தம் கேட்காமல் படிக்க வேண்டும். பேசும்போது நம்மோடு பேசும் நபரைத் தவிர பிறருக்குச் சத்தம் கேட்காதபடி பேச வேண்டும். இதே போல நடக்கும்போது பூமி அதிரும்படி யாகவோ நமது உடல் துள்ளும்படி யாகவோ நடக்காமல் அமைதியாக நடக்க வேண்டும். இவ்விதம் படிப்பது, பேசுவது, நடப்பது ஆகிய மூன்றையும் ஒரு கட்டுப் பாட்டுக்குக் கொண்டு வருகிறவர் களுக்கு எல்லா நல்ல குணங்களும் வந்து சேருகின்றன.

— ஓர் அன்பர்






# பிள்ளையாருக்கு ஏன் தோப்புக்கரணம்?

"வால்மீகி"

**பிள்ளையார்** காலடியிலே மூஞ்சூறு என்ற எலி இருக்கிறதே; அது ஏன்? எலி இனத்தில் ஒன்றுன மூஞ்சூறு எப்படிப் பிள்ளையாரின் வாகனமாயிற்று? யானை, குதிரை, சிங்கம் போன்ற வேறு வாகனங்கள் அவருக்குக் கிடைக்கவில்லையா? தானே யானை முகத்துடன் இருக்கும்பொழுது இன்னெரு மிருகத்தை வாகனமாகக் கொள்ளக்கூடாது என்று கருதி அவர் மூஞ்சூறுவை வாகனமாகக் கொண்டாரா? இது தான் போகட்டும், பிள்ளையாரை வணங்கும்பொழுது தலையில் குட்டிக் கொள்ளுவதோடு நில்லாமல் கன்னத்தில் அடித்துக்கொண்டு தோப்புக் கரணம் போடுகிறேமே, அது ஏன்? மற்றத் தெய்வங்களுக்கு இல்லாத இந்தப் புது மாதிரியான வணக்கம் பிள்ளையாருக்கு மட்டும் ஏன்? இந்தக் கேள்விகளை விளக்க, விநாயக புராணத்தில் ஒரு கதை உண்டு.

ஒருகாலத்தில் கஜமுகாசுரன் என்ற கொடிய அரக்கன் இருந்தான். அவன் சிவபிரானைக் குறித்துக் கடுமையான தவம் செய்தபொழுது, அவர் பிரசன்னமாகி, "உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று வினவினர்.

"தேவர்களும் மும்மூர்த்திகளும் சகல உலகங்களும் எனக்கு அடங்கியிருக்க வேண்டும். எனக்கு மரணமே ஏற்படக்கூடாது" என்று அந்த அசுரன் வரம் கேட்டான். வருங்கால விளைவுகளை நினையாமல் கேட்டதையெல்லாம் கொடுக்கும் வள்ளலான சிவபெருமான், "அப்படியே ஆகட்டும்" என்றுர்.

இதன் பிறகு கேட்க வேண்டுமா? இந்திரன் உட்படச் சகல தேவர்களையும் அவன் சிறைபிடித்தான். அவர்களை, "இன்றுமுதல் உங்கள் அடிமைத்தனத்தின் சின்னமாகத் தினசரி காலை, நண்பகல், மாலை ஆகிய மூன்று வேளைகளிலும் நீங்கள் காதுகளைப் பிடித்துக் கொண்டு 1008 தடவைகள் எனக்குத் தோப்புக்கரணம் போட வேண்டும்" என்று உத்தரவிட்டான்.

தேவர்கள் இந்தத் தண்டனையைப் பல காலம் அனுபவித்துப் பொறுக்க முடியாமல் மனமுருகிச் சிவபிரானைப் பிரார்த்தித்தார்கள். சிவபிரான் தமது மூத்த பிள்ளையான விக்கினேசுவரரைக் கடைக்கண்ணால் பார்க்கவும், விக்கினேசுவரர் போருக்குப் புறப்பட்டுவிட்டார். அவர் மும்மூர்த்திகளில் ஒருவர் அல்லவாகையினாலும், தேவர்களுடைய இனத்தைச் சேர்ந்தவரல்லவாகையினாலும் அவர் விஷயத்தில் கஜமுகாசுரனுக்குச் சிவபெருமான் கொடுத்த வரம் செல்லுபடியாகாது அல்லவா? ஆகையால்தான் விநாயகரைப் போருக்கு அனுப்பினார் சிவபிரான்.

எந்தவிதமான ஆயுதத்தினாலும் சாகாவரம் பெற்ற கஜமுகாசுரனை விநாயகர் தமது இரண்டு தந்தங்களில் ஒன்றைப் பறித்து மந்திரம் ஓதி ஏவினார். கஜமுகாசுரன் ஒரு ராட்சத மூஞ்சூறு வடிவம் கொண்டு விநாயகரைத் தாக்கினான். விநாயகர் அந்த மூஞ்சூறு மீது ஏறி அமரவும், அவருடைய ஸ்பரிசத்தினால் அரக்கனின் அஞ்ஞானம் மறைந்து, ஞானம் பிறந்தது. உடனே அவன் விநாயகரைப் பலவிதமாகத் துதித்தான். அன்று முதல் மூஞ்சூறு உருவில் அவனே விநாயகப் பெருமானின் வாகனமானான். சிவனுக்கு எருதும், திருமாலுக்குக் கருடனும், பிரம்மனுக்கு அன்னப்பறவையும் போல விநாயகருடைய முக்கிய வாகனம் மூஞ்சூறு ஆயிற்று.

சிறைமீண்ட தேவர்கள் விநாயகரிடம், "இதுவரை நாங்கள் அசுரனுக்கு 1008 தோப்புக்கரணம் போட்டோம். இனி எங்களை ஆட்கொண்ட உங்களுக்குத் தோப்புக்கரணம் போடுகிறோம்" என்றார்கள்.

"வேண்டாம், இந்தச் சம்பவத்தின் பயனாக என்னை வணங்குவோர் மூன்று முறை தோப்புக்கரணம் போட்டால் போதும். அவர்களுக்கு என் அருள் கிட்டும்" என்றார் விநாயகப்பெருமான்.

விநாயகரை வழிபடும்பொழுது தோப்புக்கரணம் போட இதுவே காரணமாகும். ○

---

## அன்றே வெளிவந்தது

*ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் பத்திரிகை கடந்த 60 ஆண்டுகளாக வெளிவந்து கொண்டிருக்கிறது. இந்த 60 ஆண்டுகளில் எத்தனையோ அரிய கட்டுரைகள் வெளிவந்துள்ளன. விஜயத்தின் பழைய தொகுதிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப் பட்ட கட்டுரைகளை இடவசதியைப் பொறுத்து அவ்வப்போது மீண்டும் பிரசுரிக்க நினைக்கிறோம். அவற்றுள் முதல் கட்டுரையாக இந்த இதழில் 'ஸ்ரீ அன்னையின் தரிசனம்' இடம் பெறுகிறது.*



# ஸ்ரீ அன்னையின் தரிசனம்

சாரதாதாசன்

**[1925–ஆம் ஆண்டு ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் நவம்பர் இதழில் வெளிவந்த கட்டுரை இது.]**

சுமார் பதினாறு ஆண்டுகளுக்கு முன்பு ஒரு நாள் சென்னையிலிருந்து வெளிவரும் 'ஹிந்து' பத்திரிகையில், ஸ்ரீசாரதா தேவியார் சென்னைக்கு வந்திருக்கிறார்கள் என்ற செய்தியைப் படித்த என் தகப்பனாரும் தாயாரும் என்னை அந்தப் பெரியவரைத் தரிசிக்க அழைத்துச் சென்ற சுபதினத்தின் நினைவு எனக்கு வருகிறது.

அந்தக் காலத்தில் நான் ஒன்றுமறியாத பையனாக இருந்தேன். பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோரின் பெயர்களை மட்டும் கேள்விப்பட்டிருந்தேனே தவிர, அவர்களின் பெருமையையாவது ஸ்ரீ அன்னையாரின் பெருமையையாவது நான் கேட்டறிந்தவன் அல்ல. விவேகானந்தர் வேதாந்தஞானத்தில் நிபுணர் என்றும், அவருடைய சொற்பொழிவுகள் நமது ஹிந்து மதத்திலுள்ள சந்தேகங்களை நீக்கி மறுப்புகளுக்குப் பதில்கூறி மதப்பற்றையும் தேசாபிமானத்தையும் வளர்க்க செய்யக் கூடியவை என்றும் என் தகப்பனார் சொல்ல ஏதோ நான் கொஞ்சம் கேட்டதுண்டு.

நானும் என் தாய்தந்தையரும் குதூகலம் காரணமாக மட்டுமே ஸ்ரீ அன்னையைப் பார்க்கச் சென்றோமே தவிர, சிஷ்யபாவத்துடன் நாங்கள் அவரை அணுகவில்லை. என்றாலும் மயிலாப்பூர் ராமகிருஷ்ண மடத்தின் அருகில் ஒருவீட்டில் தங்கியிருந்த ஸ்ரீ அன்னையைப் பார்த்ததும் எங்கள் மனம் ஸ்ரீ அன்னையின் அமுத நோக்கால் கவரப்பட்டது. அது காரணமாக அடிக்கடி அங்கே போய் அவரைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை எங்கள் உள்ளத்தில் அதிகரித்தது. அந்தச் சமயத்தில் ஏன் இப்படிப் பைத்தியம் பிடித்தவர்களைப் போல அங்கே செல்கிறோம் என்ற யோசனை எங்களுக்கு உண்டாகவில்லை. இப்போது யோசித்துப் பார்த்தாலும், எங்களுக்கும் ஸ்ரீ அன்னையாருக்கும் என்ன பொருத்தம் இருந்தது என்பதைச் சொல்லமுடியாது. ஸ்ரீ அன்னைக்கு ஆங்கிலமோ தமிழோ சமஸ்கிருதமோ ஒன்றும் தெரியாது. வங்காள மொழியை எள்ளளவுக்கூடப் புரிந்துக் கொள்ள எங்களுக்கு வழி கிடையாது. அவர்களோ, தெய்வத்தன்மையும் தூய குணங்களும் விளங்கும் முகத்தோடும் சதா புன்சிரிப்போடும் இருப்பவர்கள். நானோ சாதாரண மனிதனுக்கு உரிய பலவிதக் குற்றம் குறைகளைக் கொண்ட, சற்றும் மதப் பற்று எழாத ஒரு சிறிய பையன். எனினும் ஏதோ ஒரு விசேஷப் பொருத்தம் இருந்திருக்க வேண்டும். "எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்று வாய்க்கும் கண்டீர்!" —அந்தப் பொருத்தத்தை விதிப் பொருத்தம் என்றே சொல்லத்தகும்.

இவ்விதம் ஸ்ரீ அன்னையார் சென்னையில் தங்கியிருந்தபோது ஒவ்வொரு நாளும் அங்கே சென்று அவர்களைப் பார்த்து அவர்களுடைய பிரேமைக்குப் பாத்திரராகி வந்தோம். சில நாட்களில் ஸ்ரீ அன்னையைப்

பிரியும் காலம் வந்தது. என்றாலும் அதற்குள், ராமகிருஷ்ண மடத்தின் தலைவராக அப்போது விளங்கிய ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணானந்தரின் ஆளுகைக்கும் அன்புக்கும் பாத்திரர்களாகிவிட்டபடியால், ஸ்ரீ அன்னையின் பிரிவு எனக்கு அதிக வருத்தத்தைத் தரவில்லை. மேலும், என் தாய்தந்தையர் ஸ்ரீ அன்னையாரிடம் பல அரும் மந்திரங்களை உபதேசம் பெற்றனர். ஸ்ரீ அன்னையார் எங்கள் வீட்டிற்கு வந்து நாங்கள் நிவேதித்ததை ஏற்றுக் கொண்ட திருநாளை நான் என்றும் மறவேன்.

பிறகு ஐந்தாறு ஆண்டுகள் சென்றன நான் ஸ்ரீ அன்னையின் பெருமையை முற்றும் உணராத காரணத்தினால் ஸ்ரீ அன்னையைப் பிரிந்தது என்னை அதிகம் வருத்தவில்லை. எனினும்,என் தாய்தந்தையருக்கு ஸ்ரீ அன்னையைப் பார்க்கவேண்டும் என்ற ஆவல், பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் வரலாற்றையும், ஸ்ரீஅன்னையாரின் வரலாற்றையும் படிக்கப் படிக்க, ஸ்ரீஅன்னையார் அருளிய திருமந்திரங்களை ஜபிக்க ஜபிக்க, அதிகரித்தது. ஆயினும் என் தந்தையாருக்கு உத்தியோக முறையிலிருந்து ஒழிவு ஏற்படவில்லை ஆகவே அவர், என் படிப்பு முடிந்ததும் தாயாரை அழைத்துக்கொண்டு ஸ்ரீஅன்னையைக் கண்டுவர என்னை அனுப்பி வைத்தார்.

தாயாரும் நானும் புறப்பட்டுக் கல்கத்தா மடத்தார் அனுப்பிய துணையுடன் ஸ்ரீஅன்னையார் அவதரித்த ஜயராம்பாடிக்குச் சென்றோம். ஜயராம்பாடி, விஷ்ணுபூர் என்ற ரயில் ஸ்டேஷனிலிருந்து சுமார் இருபது மைல் தூரத்தில் இருக்கிறது. அது ஒருசிறிய கிராமம். இப்போது அந்தக் கிராமம் ஒரு புண்ணிய க்ஷேத்திரமாகக் கருதப்படுகிறது. ஸ்ரீஅன்னையார் அங்கு அவதரித்துப் பல ஆண்டுகள் வாழ்ந்த காரணத்தினால் அங்குஸ்ரீஅன்னைக்கு இப்போது ஒரு ஆலயமும் எழுப்பப்பட்டிருக்கிறது. ஆனால் என் தாயாருக்கு அந்தக் காலத்திலேயே அந்த ஊர் ஓர் ஆலயமாகத் தோன்றியது. அவருடைய குருதேவியார் அங்கு வசித்து வந்தார் அல்லவா?

கிராமம் சிறியதாக இருந்தாலும் அந்த ஊரின் அழகு எங்கள் உள்ளத்தை மிகவும் கவர்ந்தது. எங்களுடன் துணையாக வந்த பிரம்மசாரி விருபாக்ஷர் பரமபக்தராக இருந்தார். அந்த ஊர்க் குளத்தைக் காட்டி "இங்கேதான் ஸ்ரீ அன்னையார் ஸ்நானம் செய்வார்கள்;இது மிகவும் பரிசுத்தமானது"என்று குளத்தையும் வணங்குவார்; ஸ்ரீஅன்னையார் வழிபட்ட கோயில் என்று, அங்குள்ள சிம்மவாஹினி கோயிலில் தாமும் வணங்குவார்; ஸ்ரீ அன்னையாரைக் கண்டால் பக்தி ததும்பக் கைகட்டி வாய்புதைத்து நிற்பார். ஸ்ரீ அன்னையாரிடம் என் தாய்க்கு இருந்த பக்தியை உணர்ந்திருந்த எனக்கும் இவருடைய பக்தி பரம ஆச்சரியத்தை விளைவித்தது. பக்தி என்பது இன்னது என்று அறியாத இளங்கன்றாக நான் இருந்தேன் என்றாலும் அந்தப் பிரம்மசாரி விருபாக்ஷரின் பக்தி, என்னையும் ஸ்ரீ அன்னையாரிடம் பணிவும் பக்தியும் கொள்ளும்படிச் செய்தது.

அந்த ஊரைச் சேர்ந்த மக்கள் பலர் ஸ்ரீ அன்னையாரைப் பார்ப்பதற்காக அடிக்கடி வருவார்கள். ஸ்ரீ அன்னையாரும் அவர்களுடன் ஓயாமல் மகிழ்ச்சியுடன் பேசிக் கொண்டிருப்பார். ஆனால் எனக்கு வங்க மொழி தெரியாத காரணத்தினால் அவர்கள் பேசுவதைக் கேட்டு ஆனந்திக்க முடியவில்லை. ஆகவே ஸ்ரீ அன்னையின் தமையனுடன் வாசல் திண்ணையிலே உரையாடிக் கொண்டிருப்பேன். அவருக்கு வங்கமொழியைத் தவிர வேறொன்றும் தெரியாது. எனினும் பிரம்மசாரி விருபாக்ஷர் எனக்கும் அவருக்கும் துபாஷியாக உதவியதனால் நாங்கள் உரையாடுவது சௌகரியமாயிற்று.

நாங்கள் மூன்று இரவு ஸ்ரீஅன்னையின் ஊரில் தங்கியிருந்தோம். ஒரு நாள் ஐந்து



பேசாமல் இருந்து பழகு. சபையறிந்து பேசு.
சமயோசிதமாகப் பேசு. யோசித்துப் பேசு.

—ஓர் அன்பர்

மைல் தூரத்துக்குள் அருகில் இருந்த காமார் புகுர் என்ற ஊருக்குப் போய்வந்தோம். அந்த ஊர் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் அவதரித்த இடமாகும்.

போகும் வழியில் ஸ்ரீராமகிருஷ்ண தேவர் தியானம் செய்து சமாதிநிலையைப் பலதடவை அடைந்த தோப்பு (தற்போது ஸ்ரீராமகிருஷ்ண —சாரதா கல்லூரி அமைந்திருக்கும் இடம்) களையும் அவர் நீராடியதனல் பரிசுத்த மடைந்த (ஹல்தார்ப்புகுர்) குளத்தையும் அவர் தொழுததால் உயர்ந்த சிவன் கோவிலே யும் கண்டோம் அவர் பிறந்த வீடு இன்றும் அப்படியே இருக்கிறது. அவர் பிறந்த இடத் தில் துளசிச்செடிகள் வைத்திருந்தார்கள். (தற்போது அங்கு ஸ்ரீராமகிருஷ்ணர் கோயில் எழுந்துள்ளது.) அவர் வீட்டில் அவருடைய தமையனர் குமாரர் இருந்தார். அந்தப் பெரிய வரைக் கண்டதும், பகவான் ஸ்ரீராமகிருஷ்ண ரின் முகத்திலுள்ள அமைதியை ஒருவாறு ஊகித்து உணரலானேம். அவர் எங்களுக்கு ஸ்ரீராமகிருஷ்ணர் பால்யவயதில் போற்றி வழிபட்டு வந்த ரகுவீரரின் சிலேயைக் காட்டினர். அப்போது என் மனதில் ஓர் எண்ணம் உண்டாயிற்று: 'நாமும் இந்த ரகு வீரரின் சிலேயைப் பூஜித்துகொண்டு இங் கேயே ஏன் இருக்கக்கூடாது?' என்று நினைத் தேன். அப்போது ஸ்ரீராமகிருஷ்ணரின் வாக் கியம் ஒன்றுஎன் நினைவுக்கு வந்தது. பக்தரில் ஒருவர் தமக்குத் திருமணமாயிற்று என்றதும் பரமஹம்சர், "அப்படியானல் நீ உன் கடமைப்படி நடக்க வேண்டும். குடும்பத் தில் இருந்தே என்னை வழிபடலாம்" என்று சொன்னாம்.

மறுநாள் காலேயில் ஸ்ரீ அன்னையின் தமையனர் முகோபாத்தியாயருடன் பேசிக் கொண்டு திண்ணையில் உட்காந்திருந்தேன். அப்போது பிரம்மசாரி விருபாக்ஷர் அங்கே வந்து, "உன்னை அம்மா கூப்பிடுகிருர்" என்று கூறினர்.

நான் உள்ளே சென்றேன். ஸ்ரீஅன்னை யார் என்னை "உட்கார்" என்று ஒரு தர்ப்பாச னத்தில் இருத்தி, இராமர் பட்டாபிஷேகப் படம் ஒன்றைச் சுட்டிக்காட்டி, 'இவ்விதம் இராமரையும் சீதையையும் தியானம் செய்' என்று சைகை செய்தார். அப்போது ஸ்ரீ அன்னையாரின் முகத்திலிருந்து கருணை பொழிந்தது. அவரருகில் நான் உட்கார்ந் தேன். ஸ்ரீ அன்னையார் என் காதில் அரிய இரண்டு மந்திரங்களை உபதேசித்தார். நான் காமார்ப்புகுரில் மனதில் நினைத்துக் கொண் டதை ஸ்ரீ அன்னையார் எப்படி உணர்ந்து கொண்டாரோ? நான் அறியேன். உபதேசம் ஒரு நொடிப் பொழுதில் முடிந்தது; அங்க நியாசம் இல்லை; கரநியாசம் இல்லை. பிரம்ம சாரி விருபாக்ஷரை அழைத்து அவர் வாயி லாக, "இந்த மந்திரங்களை இடைவிடாமல் ஜபித்துத் தியானம் செய். இதற்கு நீ இன்ன காலம் என்று ஏற்படுத்த வேண்டாம். வேறு மந்திரங்களும் உனக்கு வேண்டியதில்லை. உனக்கு இதனலேயே சகல க்ஷேமங்களும் உண்டாகும்" என்று ஸ்ரீ அன்னையார் வங்க மொழியில் ஆசீர்வதித்து, என்னிடம் அவ்வி தம் தெரிவிக்கச் செய்தார்.

ஸ்ரீ அன்னையாரின் உபதேசப்படி அந்த திவ்ய மந்திரங்களை ஜபிக்க இயலாமல் பல விக்கினங்களால் தடைப்பட்ட போதிலும், ஜபத்தில் எனக்கு அதிக ஊக்கம் இல்லா விட்டாலும், ஒன்று மட்டும் என் மனதை விட்டு அகலக்கூடவில்லை. அடிக்கடி, இன்பதுன்ப வேளைகளில் என் கண் முன் ஸ்ரீ சாரதா தேவியாரின் அன்பு உருவம் தோன் றுகிறது. வார்த்தை ஒன்றுமே இல்லாமல் அவர்களின் முகமண்டலத்திலிருந்து பொழி ந்த கருணையை நான் எப்படி மறக்க முடியும்? நமக்கு ஸ்ரீ அன்னையாரிடமிருந்து மந்திரோப தேசம் கிடைப்பது அரிது என்று நினைத்து, வேண்டிக் கேட்கக் கூடத் தைரியமின்றி வெறுமனே திண்ணையில் உட்கார்ந்திருந்த என்னைத் தம் அருகில் அழைத்து ஆதரவுடன் என் மனதுக்கு இனியதொரு மந்திரத்தைப் பரிவுடன் அளித்து வாத்சல்யத்துடன் ஆசீர் வதித்தருளிய ஸ்ரீ அன்னையின் திவ்யமுகம் இன்றும் என் கண் முன் நின்று என்னை மகிழ்ச் சயில் அழ்த்துகிறது உலகில் வேறு என்ன வேண்டும்?

# ஸ்ரீ ராமபிரானின் அருளுரைகள்

# வாழ்க்கையும் அதன் முடிவும்

1. மனிதன் எங்கே சென்றாலும் காலன் கூடவே வருகிறான். எங்கும் செல்லாமல் ஓய்வு கொண்டாலும் காலன் கூடவே ஓய்வு கொள்கிறான். மனிதன் எங்கே போனாலும் எவ்வளவு தூரம்தான் போனாலும், காலன் பின் தங்கி நின்றுவிட மாட்டான்.

2. வயது ஏற ஏறத் தோலில் சுருக்கங் களும் மடிப்புகளும் தோன்றுகின்றன. மயிர் நரைத்துவிடுகிறது. மூப்பு முற்றிய நிலையில் மனிதனை அழித்தே விடுகிறது. இதை யெல்லாம் தவிர்க்க மனிதனால் ஒன்றுமே செய்ய முடியாது.

3. சூரியன் உதிக்கும்போது 'வேலை செய்து பணம் சம்பாதிக்கலாம்' என்று நினைத்து மக்கள் மகிழ்ச்சி அடைகிறார்கள். சூரியன் அஸ்தமிக்கும்போதும், 'சம்பாதித்ததைக் கொண்டு சுகமாக வாழலாம்' என்று நினைத்து அவர்கள் மகிழ்கிறார்கள். ஆனால் நாளுக்கு நாள் வாழ்நாள் குறுகி வருவதை மக்கள் நினைத்துப் பார்ப்பதில்லை.

4. பருவ காலங்கள் சுழன்று சுழன்று வரவர, 'நாம் என்றென்றைக்கும் புதுமை யுடனும் வளமுடனும் வாழ்ந்து மகிழ்ச்சி யுடன் இருக்கப் போகிறோம்' என்று மக்கள் கற்பனை செய்கிறார்கள். ஆனால் பருவ காலத்தின் சக்கரம் சுற்றச் சுற்ற, அவர் களுடைய வாழ்நாள் தேய்ந்து சிறுத்து வருவதை அவர்கள் நினைத்துப் பார்ப்ப தில்லை.

5. கடலில் கட்டைகள் மிதந்து வரும் போது ஒரு சமயத்தில் அவை யாவும் ஒன்று கூடிச் சேர்ந்திருக்கின்றன. இவ்விதம் சிறிது நேரம் ஒன்றாக மிதந்திருந்துவிட்டுப் பிறகு அவை வெவ்வேறாகப் பிரிந்து கலைந்து போகின்றன. அது போலவேதான் மனைவி யும் மக்களும் உறவினர்களும் சிறிது காலம் ஒன்று சேர்ந்திருந்துவிட்டுப் பின்பு பிரிந்து போகும் நிலையிலேயே இருக்கிறார்கள். நம் முடைய உடைமைகளின் நிலைமையும் இதுவேதான். இவ்விதம் சிறிது காலம் கூடி யிருப்பது, பிறகு பிரிந்து போவது என்ற நிலை யைத் தவிர்க்க முடியாது.

6. இயற்கையின் நடைமுறையிலிருந்து தப்பித்துக்கொள்பவனாக ஒருவனும் இந்தப் பூமியில் இல்லை. ஆகவே, இறந்து போன வர்களைக் குறித்து அழுது புலம்புவதில் ஒரு பயனுமில்லை. தன்னுடைய முறை வரும் போது மரணத்திலிருந்து தப்பித்துக்கொள்ப வன் ஒருவனும் கிடையாது.

7. பிரயாணிகள் அடங்கிய ஒரு கூட்டம் யாத்திரை போய்க்கொண்டிருக்கிறது. அந்த கூட்டத்தைச் சந்திக்கும் ஒருவன் "நானும் கூட வருகிறேன்" என்று சொல்லி யாத்தி ரையில் சேர்ந்து கலந்து கொள்கிறான். வாழ்க்கைப் பயணமும் இது போன்றதே ஆகும். நம்முடைய பெற்றோரும் பாட்டன் மார்களும் ஏற்கெனவே இந்தக் கூட்டத்தில் சேர்ந்து, உலகிலிருந்து மறைந்து விட்டார் கள், இந்த யாத்திரைக் கூட்டம் ஓயாமல் சென்று கொண்டிருக்கிறது. இதில் சேர்ந்து கொண்டால் மறையத்தான் வேண்டும். இதைப் பற்றி புலம்புவதற்கு என்ன இருக்கி றது?

8. ஆற்றுவெள்ளத்தைப் போல ஆயுள் ஒரு திசையை நோக்கிப் பாய்கிறது அது திசை மாறி வந்த வழியிலேயே எதிர்த்திசை யில் பாய்வது என்பது ஒருபோதும் நடை பெறாது. மனிதனின் ஆயுட்காலம் இடை விடாமல் அதன் நீளம் சுருங்கிய நிலையில் இருக்கிறது. ❂

# அருள்நெறிக் கதை

## உபகோசலனின் பொறுமை

நரேந்திரன்

சத்தியகாம ஜாபாலர் மிகவும் சிறந்த தபஸ்வி. அவரது குருகுலத்தில் மாணவர்கள் தங்கிப் படித்துச் சிறந்த ஞானத்தைப் பெற்று வந்தனர்.

அவ்விதம் பயில வந்த மாணவர்களில் உபகோசலன் என்ற ஒரு மாணவனும் இருந்தான். அவன் முறைப்படி ஆசிரமத்தில் வசித்துப் பன்னிரண்டு ஆண்டுகள் ஆசிரியருக்கும், அதுபோன்று அக்கினிகளுக்கும் (நெருப்பு என்ற தேவதைகள்) பணிவிடைகள் செய்து வந்தான். குருவையும் அக்கினிகளையும் வணங்கிப் பாடம் கேட்பது குருகுல சம்பிரதாயம். அதன்படி ஒழுங்காகப் படிக்கும் பிரம்மசாரிகளை ஆசிரியர் பன்னிரண்டு ஆண்டுகள் முடிந்தவுடன் வீட்டுக்கு அனுப்பிவைப்பது வழக்கம்.

அதேபோல் ஜாபாலர் தம்மிடம் பயின்று வந்த மற்ற மாணவர்கள் அனைவருக்கும் சிறந்த உபதேசங்களை வழங்கி அவர்களை அவரவர்களுடைய வீட்டிற்கு அனுப்பி வைத்தார்.

ஆனால் உபகோசலனைப் பற்றி அவர் ஒன்றும் சொல்லவில்லை. அவனை வீட்டிற்கும் அனுப்பவில்லை.

சகமாணவர்கள் குருவிடம் உபதேசம் பெற்று வீடு திரும்பிச் சென்றதையும், தன் ஒருவனிடம் மட்டும் குருதேவர் அசட்டையாக இருந்துவிட்டதையும் கண்டு உபகோசலனுக்கு மிகுந்த வருத்தம் உண்டாயிற்று. அவனது கவலை நிறைந்த நிலையைக் கண்டு குருபத்தினி அவன்மீது மிகவும் இரக்கம் கொண்டாள்.

அவள் கணவனிடம் சென்று, "சுவாமி! தங்களது செய்கை எனக்கு மிகவும் ஆச்சரியத்தைத்தருகிறது. உபகோசலனிடம் தாங்கள் அப்படி என்ன குறையைக் கண்டீர்கள்? அவனும் மற்ற மாணவர்களைப் போலத்தானே பிரம்மசரிய விரதத்தை கடைபிடித்து வந்தான்; தங்களையும் அக்கினிகளையும் பக்தியோடு வணங்கித் துதித்து வந்தான். எனவே நீங்கள் இவனுக்கும் உபதேசமளித்து அவனுக்கு விடைகொடுத்து வீட்டிற்கு அனுப்பி வைக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். நீங்கள் அவ்விதம் செய்ய மறுத்தால் அவனது சேவையில் திருப்தியடைந்த அக்கினிகள் உங்களை மதிக்கமாட்டார்கள்." என்று கூறினாள்.

ஆனால் அவள் கூறியது செவிடன் காதில் ஊதிய சங்காயிற்று.

மனைவி கூறியதை முனிவர் காதில் வாங்கிக் கொள்ளாமலே எங்கோ யாத்திரை செல்லக் கிளம்பிவிட்டார்.

இதைக் கண்டதும் உபகோசலனின் வருத்தம் பின்னும் அதிகமாயிற்று. இதனால் அவன் உண்ணாநோன்பிருக்கத் தீர்மானித்தான்.

குருவின் மனைவி உபகோசலனை அணுகி, "குழந்தாய்! நீ ஏன் உணவு உட்கொள்ள மறுக்கிறாய்?" என்று வினவினாள்.

உபகோசலன், "தாயே! என் மனம் மிகவும் கஷ்டப்படுகிறது. மனநிலை சரியில்லாமையினால் எனக்கு உணவு பிடிக்கவில்லை" என்றான்.

உபகோசலன் பட்டினி கிடப்பதைக் கண்ட அக்கினிகள் கவலை கொண்டனர். தங்களுக்குள் அவர்கள் கலந்து ஆலோசித்து,

"இந்தப் பிரம்மசாரி நமக்குச் சிரத்தையுடன் முழுமனதுடன் சிறந்த முறையில் சேவை செய்துள்ளான். இவனுடைய சிறந்த தவத்திற்காக இவனுக்குச் சிறந்த உபதேசததைச் செய்து இவனது மனக்கஷ்டத்தை நாம் போக்கவேண்டும்" எனத் தீர்மானித்தனர். அதன்படியே அவர்கள் தீர்க்கமாக ஆலோசித்து, முறைப்படி பிரம்ம வித்தையை அவனுக்கு உபதேசித்து ஆசிவழங்கிவிட்டுச் சென்றனர்.

சிறிது நாட்கள் கழிந்ததும் குருதேவர் தமது யாத்திரையை முடித்துக் கொண்டு ஆசிரமம் திரும்பினர் தம் சீடரான உபகோசலனின் முகத்தில் பிரம்மதேஜஸ் வீசுவதைக் கண்டார். அவனருகில் சென்று, "குழந்தாய்! உன் முகத்தில் பிரம்மக்களை பிரகாசிக்கிறதே! உனக்கு யார் பிரம்ம தத்துவத்தை உபதேசித்தது?என்னிடம் கூறமாட்டாயா?" என்ருர்

உபகோசலனுக்கு மிகவும் கூச்சமாக இருந்தது. இருப்பினும் மிகவும் மரியாதையுடன் குருவினிடம் நடந்த விஷயம் முழுவதையும் எடுத்துரைத்தான்.

அதைக்கேட்டு உளம் மகிழ்ந்த குருதேவர், "குழந்தாய்! அக்கினிகள் உனக்கு உபதேசித்தது அப்படி ஒன்றும் மேலானது என்று கூறி விடமுடியாது. நான் இப்போது உனக்கு அதைவிட மேலான பிரம்மதத்துவத்தை உபதேசிக்கப் போகிறேன். அதைக் கவனத்துடன் கேள். அதைச் சரிவரப் புரிந்துகொண்டால் பிரம்மதத்துவத்தை உணர்வாய். இப்படிப் பிரம்மதத்துவத்தை உணர்ந்த உயிர்களைப் பாவமும் தாபமும் தொட முடியாது. தாமரையிலை மேல் தண்ணீர் எவ்வாறு ஒட்டாமல் ஓடி விடுகிறதோ அதேபோல் வினைப் பயன்கள் அணுகாமல் விலகிச் சென்று விடும்" என்று கூறி, அவனுக்குப் பிரம்ம தத்துவம் எனப்படும் ரகஸ்யமான தத்துவத்தை உபதேசித்து விடைகொடுத்து வீட்டிற்கு அனுப்பிவைத்தார்.

சாந்தோக்கிய உபநிஷத்தில் காணப்படும் மேற்கூறிய கதையிலிருந்து பொறுமையாக இருப்பவன் மேலான நன்மையை அடைய முடியும் என்பதை உணர்கிறேம்.

சிறந்தஉண்மைகளை அறிய பொறுமையும் தகுந்த காலமும் வாய்க்க வேண்டும்.

## திருஐந்தெழுத்து

புண்ணிய நதிகளில் முழுகி, புண்ணியத் தலங்களில் விளங்கும் புனித மூர்த்தியைத் தரிசிப்பதனல் பல பிறவிகளில் புரிந்து குவிந்துள்ள சஞ்சித வினைகள் எரிந்து கரிந்து சாம்பலாகிவிடும். வினைகள் விலக வேண்டுமானல் திருமந்திர ஜபம், திருமுறைப் பாராயணம், திருத்தல யாத்திரை முதலியவற்றை மேற்கொள்ள வேண்டும்.

"விண்ணளவும் அடுக்கிய விறகு மலையை ஒரு சிறு நெருப்புப் பொறி புகுந்து அழிப்பது போல் ஒரு கோடிப் பிறப்புகளில் செய்த சஞ்சித வினைமலையைத் திருஐந்தெழுத்து சாம்பலாக்கிவிடும்" என்கிருர் அப்பரடிகள். அந்தக் கருத்தமைந்த அப்பர் பாடல் வருமாறு :-

விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகில் அவை ஒன்றும் இல்லையாம்
பண்ணிய உலகினில் பயின்ற பாவத்தை
நண்ணி நின்றறுப்பது நமச்சிவாயவே,






# திருவடிக்கு வந்த தீங்கு

வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்

இறைவனுடைய திருமுடியைப் பார்த்துத் தம் கற்பனைக் குதிரையைத் தூண்டிவிட்ட காரைக்காலம்மையார், இப்போது அவனுடைய திருவடியைக் காணப் புகுகிறார். அதைக் காணும்போது அவருக்குத் தாய்த் தன்மை குமிழியிடுகிறது. 'அடடா! இந்த அடி என்ன, இப்படி ஆகிவிட்டது!' என்று அங்கலாய்க்கிறார்.

தன் குழந்தை சிறிது சோர்ந்தாற் போல இருந்தால், 'என் குழந்தைக்கு என்ன வந்தது? இப்படி இளைத்துப் போய் விட்டதே!' என்று இரங்குவது தாயின் இயல்பு. அந்த இயல்பு அம்மையாரிடம் வெளிப்படுகிறது. அம்மையார் இறைவன் 'அம்மையே!' என்று அழைக்கும் சிறப்புடையவர். அவர் இப்போது உண்மையில் தாய்க்கு உரிய வாத்ஸல்யத்தோடு இறைவன் திருவடியைப் பார்க்கிறார்.

''ஆ! இந்தத் திருவடி தாமரையைப் போல எவ்வளவு அழகாக இருக்கும்! அடியார்களெல்லாம் பாதாம்புயம் என்று புகல் புகும் சரணாலயம் அல்லவா இந்தத் திருவடிகள்! தாமரையைப் போல விரிந்தும் மலர்ச்சி பெற்றும் மணமும் குளிர்ச்சியும் வனப்பும் உடையனவாக விளங்குமே இவை! இப்போது எப்படி இருக்கின்றன? பார்க்கச் சகிக்கவில்லை! கண்ணைக் குத்தும்படி காட்சி அளிக்கின்றனவே! நல்ல திருவடிகள் பொல்லாதனவாக, அந்த நல்ல தோற்றத்தை இழந்து காண்கின்றனவே! ஐயோ பாவம்! என்ன தீங்கு வந்தது இவற்றிற்கு?'' என்று உள்ளம் கரைகிறார்.

ஏ பாவம்! பொல்லாவாம்,
அந்தா மரை போல் அடி!

அந்தத் திருவடியின் அழகைப் பார்த்துப் பார்த்து மகிழும் அம்மையாருக்கு இப்போது அதன் தோற்றத்தைக் கண்டு உள்ளம் உருகுகிறது. ''ஏன் இப்படி ஆயிற்று?'' என்று எண்ணிக் கலங்குகிறார்.

''ஓ! இப்போது இப்படி மெலிந்து தழும்பேறியல்லவா தோன்றுகின்றன? எம்முடைய அப்பனே! இது என்ன அலங்கோலம்!'' என்று புலம்புகிறார்.

முசிந்து எங்கும்
எந்தாய்! தழும்பேறி ஏபாவம்!
பொல்லாவாம் அந்தா மரை போல் அடி!

''அப்பா! என்ன இது! பார்க்கப் பாவமாய் இருக்கிறதே!'' என்கிறார். அந்தத்



''மஹா ஜநோ யேந கதः ஸ் பந்தா:''—பெரியோர் சென்ற வழியே சீரான வழி. —சம்ஸ்கிருத முதுரை

மற்றவர்கள் உனக்கு என்ன செய்யக்கூடாதுதென்று நினைக்கிறாயோ அதை நீயும் மற்றவர்களுக்குச் செய்யாதே. குற்றங்களில் பெரிய குற்றம் தன் குற்றங்களைத் திருத்த முயலாததுதான். —கன்பூஷியஸ்

திருவடி முழுவதும் தழும்பேறிக் காய்த்துப் போய் இருக்கிறது. நடந்து சென்ற வடுவாக இருந்தால் திருவடியில் உள்ளங்கால் சுவடு பட்டிருக்கும். ஆனல் இது என்ன? திருவடி முழுவதும், ஒவ்வோர் அங்குலமும் தழும்பேறி இருக்கிறதே! என்ன காரணம்?

யோசித்துப் பார்க்கிருர். காரணம் விளங்குகிறது. ஊரில் உள்ளவர்களெல்லாம் குழந்தையின் அழகைக் கண்டு எடுத்து முத்தமிட்டு முத்தமிட்டுச் சிவந்திருக்கும் அதன் கன்னங்களைப் போல அல்லவா இந்த அடிகள் இருக்கின்றன? ஆம்! தேவர்கள் செய்த காரியத்தால் வந்த வினை இது! வானத்தில் வாழும்படி விதிக்கப்பெற்ற விண்ணோர்கள் இறைவனைத் தரிசித்து விட்டுச் சும்மாவா போகிருர்கள்? அவனுடைய திருவடியில் விழுந்து விழுந்து வணங்கிவிட்டுச் செல்கிருர்கள். ஒவ்வொருவரும் தம் முடியை அவன் கால்களில் வைத்து வணங்குகிருர்கள். அவர்கள் தலையில் முடிகளை அணிந்திருக்கிருர்கள்; அந்த முடிகள் இந்த மெத்தென்ற திருவடிகளிலே படியும்படி வணங்கிவிட்டுப் போகிருர்கள்.

அந்த முடிகள் மெத்தென்று இருக்கின்றன? பசும்பொன்னல் அமைந்து மணிகளைப் பதித்த மகுடங்கள் அவை. மணிகள் பார்க்க ஒளி வீசினலும் கற்களே அல்லவா? இறைவன் திருவடிகள் கல்லின் மேல் நடக்கவில்லை. ஆனல் தேவர்களின் முடிகளிலுள்ள கற்கள் அந்தத் திருவடிகளில் படிந்து படிந்து இந்தத் தழும்பை உண்டாக்கியிருக்கின்றன. ஒருவரா, இருவரா? முப்பத்து முக்கோடி தேவர்களும் இறைவனிடம் வந்து அவன் திருவடிகளில் முடியைச் சாய்த்து வணங்குகிருர்கள். அந்தச் செயல் அவர்களுடைய பணிவையும், இறைவனுடைய தலைமையையும் காட்டுகின்றனவானலும் அந்தத் திருவடிகளுக்குத்தான் எவ்வளவு துன்பம் நேர்ந்துவிட்டது!

ஒரு வீரன் வெற்றி பெற்றதை அறிந்து அவனிடம் மகிழ்ச்சியோடு வந்து அவன் கையை மக்கள் குலுக்குகிருர்கள். நூற்றுக் கணக்கான மக்கள் இப்படிக் குலுக்கியதால் அந்தக் கைக்கு வலி எடுக்கிறது; சுளுக்கியே விடுகிறது. இந்தப் பழக்கத்தைப் பற்றி ஜவாஹர்லால் நேரு ஒரு முறை ஒன்று சொன்னர். "கையைப் பலரும் குலுக்கி மகிழ்ச்சியைத் தெரிவிப்பது நல்லதுதான். ஆனல் குலுக்குகிறவர்கள் பலபேர். குலுக்கப்படும் கை ஒன்றுதான். பலரும் குலுக்குவதால் கை தன் சுவாதீனத்தை இழந்துவிடுகிறது. இப்படிக் குலுக்கும் பழக்கத்தைவிட, நம் நாட்டு முறைப்படி அஞ்சலி செய்வதே மேல் என்று தோன்றுகிறது" என்று அவர் சொல்லியிருக்கிருர்.

தேவர்களெல்லாம் தம் பணிவைக் காட்டப் போய் இந்தத் திருவடிகளுக்கு அல்லவா தீங்கு வந்திருக்கிறது? அவர்கள் மிகவும் பக்தியுடன் காலில் விழுகிருர்கள். முடிகளை அவற்றின் மீது படிய வைத்து இப்படியும் அப்படியும் தலையைத் திருப்புகிருர்கள். அந்த முடிகள் திருவடிகளையே தேய்த்து விடுகின்றன. தம்முடைய உயர்ந்த பதவிச் செருக்கால் இறுமாந்து நிற்கும் அவர்கள், இறைவன் திருவருளே காரணம் என்பதை உணர்ந்து அவன் முன் விழுந்து திருவடிகளிலே முடி பணிய வணங்குகிருர்கள். பணிவைக் காணும்போது மகிழ்ச்சியாகவே இருக்கிறது. ஆனல் அந்தப் பணிவினல் திருவடிகளுக்கு அல்லவா இன்னல் உண்டாகிவிட்டது? அந்த அடிகளில் தேவர்களின் முடிகளின் தழும்புகள் ஏறிப் பார்க்கப் பொறுக்க முடியவில்லையே!

இப்படி எண்ணி வருந்துகிருர் அம்மையார்.

**விசும்பில் விதியுடைய விண்ணோர் பணிந்து**
**பசும்பொன் மணிமகுடம் தேய்ப்ப, — முசிந்து எங்கும்,**
**எந்தாய்! தழும்பு ஏறி, ஏபாவம்! பொல்லாவாம்**
**அந்தா மரைபோல் அடி!**

எங்கள் தந்தையே, வானத்தில் வாழும் நியமனத்தையுடைய தேவர்கள் கீழே விழுந்து தம்முடைய தூய பொன்னும் மணியும் கொண்டு சமைத்தக் கிரீடங்களைப் படியும்படி தேய்ப்பதனல், உன்னுடைய அழகிய தாமரையைப் போலத் தோற்றம் அளிக்கும் திருவடிகள் நலிவு பெற்று, எங்கும்

தழும்பு ஏறிக் காண்பதற்கு அழகற்றனவாக இருக்கின்றனவே ! அந்தோ பாவம் !

[விசும்பு – வானுலகம். விதி - இறைவனால் ஆணையிடப்பட்ட முறை. முன்னால் விசும்பு என்று வந்தமையால் பின் நின்ற விண்ணோர் என்பது தேவர் என்னும் துணையாக நின்றது. பணிந்து—கீழே விழுந்து திருவடியில் முடி சாய்த்து வணங்கி ; மணிமகுடம் தேய்ப்ப என்றதனால் அடியில் வீழ்ந்து வணங்கியது புலனாகிறது. பசும்பொன் — கலப்பில்லாத பொன் ; செம்பைக் கலந்து அணிகளைச் செய்யும்போது அது செம்பொன் ஆகிறது. இங்கே பசுமை மஞ்சள் நிறத்தைக் குறிக்கிறது. பொன்னிலே மணியைப் பதித்துச் பதித்துச் செய்த மகுடம் அவை ; மணிகள் கற்களைப் போல உறுத்தித் தேய்க்கின்றன. ஒளியுடைய மணிகள் ஆனாலும் ஸ்பரிசித்தற்குக் கல்லைப் போல வன்மையுடையனவாக இருக்கின்றன.

திருக்கோயிலில் உழவாரத்திருப்பணியை நாவுக்கரசர் செய்து வந்தபோது இந்திரன் அவரைச் சோதிப்பதற்காக அவர் தொண்டு செய்த பிரகாரத்தில் பொன்னையும் மணியையும் இட்டான். அவற்றை மற்றவர்கள் கண்டால் உடனே எடுத்துச் சேமித்து வைப்பார்கள். 'ஓடும் கல்லையும் ஒக்கவே நோக்கும்' திருநாவுக்கரசர் அவைகளும்வலம் வரும் அடியார்களின் அடிகளில் உறுத்துமே என்று கல்லையும் மண்ணையும் ஒதுக்குவது போல, உழவாரத்தால் தள்ளினாராம். இந்த வரலாறு இங்கே நினைவுக்கு வருகிறது.

தேவர்களின் மகுடத்திலுள்ள மணிகள் நம் கண்களுக்கு ஒளியும் அழகும் உடையனவாகத் தோன்றினாலும் இறைவன் திருவடிகளுக்குத் துன்பம் தருகின்றவையே ! அந்தத் திருவடிகளில் தேய்ப்பதனால் தழும்பை உண்டாக்குபவை. எங்கும்—திருவடி முழுவதும். ஏ, பாவம் : இரண்டும் இரக்கக் குறிப்பு. ஏறி – ஏற ; எச்சத்திரிபு. பாவம் என்பது புண்ணியத்தின் மறுதலையைக் குறிக்காமல் இரக்கத்தை வெளியிடுவதாக நிற்கிறது; குறிப்புச்சொல். பொல்லா—நலமாகிய அழகை இழந்து காணப் பொறுக்காத தோற்றத்தை உடையன.

அடி, விண்ணோர் பணிந்து தேய்ப்ப, முசிந்து, ஏறி, பொல்லாவலம் என்று வினை முடிவு செய்க.]

இறைவனுடைய திருவடிகளைக் கண்டு இரங்குவதைப் போல, அவனுடைய தனித்தலைமையைப் புலப்படுத்துகிறது இந்தப் பாட்டு. இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 76-ஆம் பாடல். ⊕

---

## மகான் தியாகராஜரின் பதில்



மகான் தியாகையர், ராமானுஜதாசர் என்னும் கீழ்க்குடிப் பிறந்த ஒருவரோடு ராமனின் பக்திசேவையில் திளைத்திருந்தார். ஊரார் இது குறித்து அவரை இகழ்ச்சியாக வினவியபோது, தியாகையர் ஓர் அழகான பொருட்செறிவுள்ள கீர்த்தனை மூலம் பதிலளித்தார். அந்தக் கீர்த்தனையின் கருத்து வருமாறு :

இலைகளைத் தின்கிறது ஆடு. அதனால் அது உபவாசம் இருப்பதாக ஆகிவிடுமா? காட்டிலே திரிந்து வாழ்கிறது குரங்கு. அதனால் அது வானப்பிரஸ்தம் மேற்கொண்ட துறவி என்ற பட்டத்துக்கு உரியதாகுமா?

குழந்தை நிர்வாணமாக இருப்பதனாலேயே அவதூதஸ்வாமிகள் ஆகிவிடுமா? குகையிலே அடைந்து கிடக்கும் கள்ளர் யோகியர் ஆகிவிடுவார்களா ? எத்தனை துன்புறுத்தினாலும் (திருட்டுக்) குற்றத்தை ஒப்புக்கொள்ளாமல் வாய்மூடி இருக்கும் நரிக்குறவர் மௌனஸ்வாமிகள் ஆகிவிடுவாரா?

செய்யும் தொழிலோ, பிறந்த குலமோ. போடும் வேஷமோ பகவானின் அண்மையை நிர்ணயிப்பதில்லை; பக்தி ஒன்றே முக்கியம்.

—சூடாமணி ஜகந்நாதன்



# இராமானுஜ வேதாந்தம்

எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்

**உயிர் நிலை**

ராமானுஜ நெறியில் உயிர்களின் நிலை இங்கு விளக்கப்படுகிறது.

எல்லா உயிர்களுக்கும் தந்தையாகவும் ரட்சகனுகவும் தலைவனுகவும் நாயகனுகவும் அறியத்தக்கவனுகவும் உடையவனுகவும் ஆதாரமாகவும் ஆத்மாவாகவும் அனுபவிப்பவனுகவும் இறைவனுன ஸ்ரீமந்நாராயணன் விளங்குகின்றுன். அத்தகைய நாராயணனுக்குப் பிள்ளையாகவும் ரட்சிக்கப்படுபவனுகவும் அடியானுகவும் நாயகியாகவும் அறிபவனுகவும் உடைமையாகவும் தாங்கப்படுபவனுகவும் உடலாகவும் அனுபவிக்கப்படுபவனுகவும் ஒவ்வொரு ஜீவனும் (உயிரும்) இருக்கிறுன். உயிர்கள் எனப்படும் ஜீவர்கள் அனைவரும் இறைவனேடு இத்தகைய ஒன்பது வகைப்பட்ட இயல்பான உறவுகளைக் கொண்டவர்களாக இருக்கிறுர்கள்.

உயிர் எனப்படும் ஜீவாத்மா ஈசுவரனைப் போலவே என்றும் இருப்பவன். உடல், புலன்கள், மனம், பிராணன் எனப்படும் சடப்பொருள்களைக் காட்டிலும் மிகவும் வேறுபட்டதாகவும், அந்த அந்த உயிருக்கு 'நான்' 'நான்' என்று எப்போதும் தோன்றிக் கொண்டிருப்பதாகவும் இருப்பது ஆத்மா. இந்த ஆத்மா இயற்கையில் அறிவுமயமாகவும் ஆனந்தமயமாகவும் இருப்பது; எங்கும் பரவக்கூடிய அறிவை உடையது. முக்தி நிலையில் இதன் அறிவு எங்கும் பரவுகிறது. ஆயினும் (பிராகிருதமான உடலோடு தொடர்பினுல் இந்த லீலாவிபூதியிலுள்ள) உயிர்களுக்கு அவரவர் செய்த பூர்வ கர்மங்களால் ஏற்பட்ட உடலின் தொடர்பால் அந்த அறிவுக்கு ஏற்றத்தாழ்வுகள் ஏற்படுகின்றன.

இறைவனுக்கும் அவனடியார்க்கும் அடிமைப்பட்டிருப்பதையே இயல்பாகக் கொண்டது உயிர்.

நித்தியமான ஆத்மாவுக்கு அநாதிகாலமாக பலவகைப்பட்ட உடல்களோடு, பூர்வகர்மம் காரணமாகத் தொடர்பு ஏற்படும்போது பிறப்பும், அந்தத் தொடர்பு அழியும்போது இறப்பும் உண்டாவதாக உலகில் வழங்கப் படுகிறது. உண்மையில் ஆத்மஸ்வருபத்திற்குப் பிறப்பும் இறப்பும் கிடையாது.

ஆத்மா அணுபரிமாணம் உடையதாய், உடலின் நடுவிலுள்ள இதயத்தில் வாழ்கிறது. கண் முதலிய இந்திரியங்களுக்குப் புலப்படாத காரணத்தினுல் பௌதிகப் பொருள்களை அறிவது போலே ஆத்மாவை அறிய முடியாது.

அணுவாய் இதயத்தில் வாழ்ந்தபோதிலும், விளக்கானது ஒளியால் அறைமுழுவதும் பரவுவது போல, ஆத்மாவானது தன் அறிவினுல் உடல் முழுவதும் பரவிநின்று உடலில் ஏற்படும் இன்ப துன்பங்களை மெய் வாய் கண் மூக்கு செவி மனம் என்னும் ஞானேந்திரியங்களோடும், நாக்கு கை கால் மலத்தைத்தள்ளும் பாயு ஆண்பெண் சேர்க்கைக் கருவியான உபஸ்தம் என்னும் ஐந்து கர்மேந்திரியங்களோடும் மனதின் மூலம் தொடர்பு கொண்டு, தீண்டுவது சுவைப்பது காண்பது மோப்பது கேட்பது பேசுவது எடுப்பது நடப்பது முதலான செயல்களைச் செய்கிறுன் ஜீவன்.

இவ்விதம் ஆத்மாவாகிய ஜீவன் அறிபவனுன ஜ்ஞாதாவாகவும், செயல்புரிபவனுன கர்த்தாவாகவும், அனுபவிப்பவனுன போக்தாவாகவும் ஆகிருன்; இப்படி ஆகும்போது ஈசுவரனுக்கு ஆதீனமாகவே (உட்பட்டவனுகவே) இருக்கிருன். ஆயினும் ஒவ்வொரு நல்வினை தீவினைகளைப் புரியும்போதும் இறைவன் முதல்முயற்சியில் இவனுக்குச் சுதந்திரம் (Free Will) அளித்திருப்பதால், அந்த நல்வினை தீவினைகளுக்கு இன்ப துன்பங்களைப் பலனுகக் கொடுப்பதனுல் ஈசுவரனுக்குப் பட்சபாதம், கருணையின்மை முதலான தோஷங்கள் (குற்றங்கள்) ஏற்படுவதில்லை.

ஆத்மாக்கள் எப்போதுமே கர்மசம்பந்தமற்ற நித்திய சூரிகள் என்றும், ஒரு காலத்தில் கர்மசம்பந்தம் நீங்கப்பெற்ற முக்தர்கள் என்றும், கர்மத்தாலும் அதுகாரணமாக வரும் தேகத்தாலும் கட்டுப்பட்டவர்களான பத்தர்கள் (பந்தப்பட்டவர்கள்) என்றும் மூவகைப்படுவர். ஒவ்வொரு வகையினரும் கணக்கற்றவர். முதலிரண்டு வகையினரும் நித்திய விபூதியிலும், மூன்ருவது வகையினர் லீலா விபூதியிலும் உள்ளனர். மூன்ருவது வகைப்பட்ட இந்த உலகிலுள்ள ஜீவர்களுக்கு ஜடப்பொருளான ப்ராக்ருத தேகத்தின் தொடர்பாலே அஞ்ஞானம் முதலான தாழ்வுகள் ஏற்படுகின்றன. இந்த உடல்தொடர்பு அடியோடு நீங்கும்போது இவர்கள் முக்தர்களாகிருர்கள். அப்போதும் இவர்கள் ஈசுவரனேடு ஒன்ருவதில்லை. அவனேடு ஒத்த பல பெருமைகளை உடையவர்களாகவும், பிரகிருதிமயமான உடலின் தொடர்பினுல் வரும் தாழ்வுகள் அற்றவர்களாகவும், மறுபடியும் என்றும் பிரகிருதிமயமான உடலின் தொடர்பு ஏற்படாத வாழ்வுநிலையை அடைகிருர்கள்.

சாஸ்திரங்களில் அசேதனப் பொருள்களை (ஜடப்பொருள்களை) இறைவனேடு ஒன்ருக வழங்கியிருப்பது போலே, சேதனனுன ஜீவனையும் இறைவனேடு ஒன்ருக வழங்கியிருப்பதற்குக் காரணம், இறைவன் அனைத்துக்கும் ஆத்மாவாகவும், மற்றவையனைத்தும் அவனைவிட்டுப் பிரித்துக் காணமுடியாத சரீரமாகவும் இருப்பதே ஆகும். ஆகையால் சம்சார நிலையில் இருப்பதைப் போலே மோட்சநிலையிலும் ஜீவன் பிரம்மத்தோடு ஒன்ருவதில்லை. இது உயிர்கள் பற்றிய ராமானுஜ நெறி.

**வாழ்வு என்னும் முக்திநிலை**

ராமானுஜ நெறியில் வாழ்வு எனப்படும் முக்திநிலை விளக்கப்படுகிறது.

உயிராகிய ஜீவன் இறைவனுகிய ஸ்ரீமந் நாராயணனின் அருளாலே பிரகிருதிமயமான உடலின் தொடர்பு நீங்கப்பெற்று, நித்திய விபூதியாகிற பரமபதம் சென்று தான் விரும்பிய வாழ்க்கையைப் பெறுவது முக்தி நிலை எனப்படுகிறது.

உயிரானது பரமபதம் சென்று ஞானுனந்தமயமான தன் ஆத்மஸ்வருபத்தையே சரீரமில்லாமல் என்றும் தான் தனிநின்று அனுபவித்துக்கொண்டிருப்பது கைவல்யம் எனப்படும் மோட்சநிலையாகும். இவ்விதம் 'கைவல்யம்' என்று சொல்லப்படும் தாழ்ந்த மோட்சத்தையோ, அல்லது இறைவனுன ஸ்ரீமந்நாராயணனை அடைந்து, அப்ராக்ருத சரீரம்பெற்று அந்தமில்பேரின்பத்து அடியவரான நித்தியமுக்தர்களோடு கூடிநின்று அவனை அனுபவித்துப் பேரின்பமடைதல், அவனுக்குக் கைங்கர்யம் செய்து பேரின்பமடைதல், அவனது மகிழ்ச்சியையே பயனுகக் கொண்டு அவனுக்கு அடிமைசெய்து அவனுடைய முகமலர்ச்சியைக்கண்டு பேரின்பமடைதல் ஆகிய இவற்றில் தான் விரும்பியதொன்றைப் பெறும் தலைசிறந்த மோட்சத்தையோ, இந்த உலகில் தான் விரும்பியபடி ஒருவன் அடைகிருன் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

இந்தத் தலைசிறந்த மோட்சமாகிய ஸாயுஜ்யமே 'பரமமோட்சம்' என்றும், 'நல்வீடு' என்றும், 'வீறுபெறு துறக்கம்' என்றும் கூறப்படுகிறது.

நித்திய சூரிகளுக்குப் போலே இந்த உலகிலுள்ள பத்த ஜீவர்களுக்கும் இத்தகைய நல்வீட்டை அருளித் தான் இன்புற வேண்டும் என்னும் ஆசையாலேயே ஸ்ரீமந்நாராயணன் பிரளயகாலத்தில் சூட்சுமமான மூலப்பிரகிருதி

என்னும் அசேதனப் பொருளோடு கலந்து, சரீர இந்திரியங்கள் அற்றுக்கிடக்கும் ஜீவர்களுக்குச் சிருஷ்டிகாலத்தில் ஸ்தூலமான உடலையும், இந்திரியங்களையும் அளித்து, தன்னை அறிவிக்கும் சாஸ்திரங்களையும் அளித்து, தானும் இந்த உலகில் அவதரித்துப் படாதனபட்டு, ஞானிகளையும் அவதரிக்கச் செய்கிறான். இத்தகைய நல்வீட்டை விரும்பினால், இதை அடைவதற்கு ஒவ்வொரு ஜீவனுக்கும் உரிமை உண்டு என்று ராமானுஜ நெறி கூறுகிறது.

இந்த நல்வீட்டை அடைவதற்குப் பற்பல படிகளாகவே உலகிலுள்ள எல்லாச் சமயங்களையும் இறைவன் படைத்திருக்கிறான் என்பதும் ராமானுஜ நெறியின் உட்கருத்தாகும்.

பரமபதத்தில் ஸ்ரீமந்நாராயணனுக்கும் அவனுடைய அடியார்களுக்கும் கைங்கர்யம் செய்து பேரின்பப் பெருவாழ்வு பெறுவதற்காக முக்தஜீவன் இறைவனின் விருப்பத்தை பின்செல்லும் தன் விருப்பப்படி அப்ராக்ருதமான சரீரத்தை எடுத்துக்கொள்கிறான். ஈசுவரனுடைய திருமேனி போலே இந்த முக்த சரீரமும் நித்தியவிபூதியிலுள்ள சுத்தசத்துவமுடைய அசேதனப் பொருளால் ஆனது.

சத்துவம் ரஜஸ் தமஸ் என்னும் முக்குணங்களுடைய ப்ராக்ருத சரீரம்போலே இந்தச் சரீரத்தைக் கொண்டு எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் எல்லா நிலைகளிலும் உசிதமான எல்லாவிதமான கைங்கர்யங்களையும் செய்கிறான், பேரின்பப் பெருவாழ்வு பெற்ற முக்தன். இதுவே ஜீவ சொருபத்திற்குத் தகுந்த பெருவாழ்வு ஆகும்.

இந்தக் கைங்கர்யத்தையும், தாசனான தன் ஆனந்தத்திற்காக என்று எண்ணிச் செய்யாமல், சுவாமியான அவனுடைய ஆனந்தத்திற்காகவே என்று எண்ணிச் செய்ய வேண்டும்.

சம்சார மண்டலத்தில் இருக்கும்போது அவன் மகிழும் வகையில் கைங்கர்யத்தைச் செய்ய ஆசைப்படுபவர்களுக்கே அத்தகைய பெருவாழ்வு கிடைக்கும் என்பதை, 'தனக்கேயாக எனைக்கொள்ளும் ஈதே எனக்கே கண்ணனை யான்கொள் சிறப்பே' என்று நம்மாழ்வாரும், 'உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்று ஆண்டாளும் குறிப்பிட்டுள்ளனர்.

இதயத்தில் தூய்மை உடையவர்கள் பாக்கியவான்கள். ஏனெனில் அவர்கள் கடவுளைக் காண்பார்கள். —ஏசுநாதர்

உடைமையான ஜீவனை அடைந்து தான் இன்புற வேண்டும் என்பதே உடையவனான இறைவனின் விருப்பம். ஆகவே, ஜீவன் மோட்சத்திலும் தன் ஆனந்தத்தைக் குறிக்கோளாகக் கொள்ளாமல் இறைவனின் ஆனந்தத்தையே குறிக்கோளாகக் கொள்வது தலைசிறந்தது.

இத்தகைய மோட்சத்தையும் இறைவன் எவருக்கும் நிர்ப்பந்தப்படுத்திக் கொடுப்பதில்லை. எவர் இத்தகைய அடிமை செய்ய ஆசைப்படுகிறார்களோ அவர்களுக்கே இதை அருளுகிறான் இறைவன். ஆகையால் இந்த அடிமை இந்த உலகில் தகாதவர்களுக்குச் செய்யும் அடிமை போலே துன்பத்தை விளைப்பதாக இராமல் உயிர்களுக்கு எல்லா உறவுமாக இருக்கும் இறைவன் விஷயத்தில் அவனது மகிழ்ச்சிக்காகச் செய்யப்படுவதாகையால் பேரின்பப் பெருவாழ்வாக அமைந்திருக்கிறது.

ராமானுஜ நெறியின்படி உயிர்களுக்கு முக்தியை அளிப்பதற்கு உரியவன் திருமாலேயாவான். 'மோட்சத்தை அளிக்கவல்லவன் புருஷோத்தமனே' என்று புருஷசூக்தமும், 'மோட்சத்தை ஜனார்த்தனனிடமிருந்தே பெற வேண்டும்' என்று ரிஷிகளும், 'எருத்துக் கொடியுடையானும் பிரமனும் இந்திரனும் மற்றும் ஒருத்தரும் இப்பிறவி என்னும் நோய்க்கு மருந்தறிவாருமில்லை ; மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணா' என்று பெரியாழ்வாரும், 'மறுபிறப்பு அறுக்கும் மாசில் சேவடி மணிதிகழ் உருபின் மாஅயோயே', 'நாறு இணர்த்துழாயோன் நல்கின் அல்லதை ஏறுதல் எளிதோ வீடுபெறு துறக்கம்' என்று சங்ககாலப் புலவர்களும் கூறிய அர்த்தத்தையே இந்த விஷயத்திலும் ராமானுஜர் வலியுறுத்தினார் என்று விளங்குகிறது.

[276-ஆம் பக்கத் தொடர்ச்சி]

யானைத்தலையை வேருகவும் உடலை வேருகவும் துண்டித்தது. தலை அறுபட்டு விழும் சமயத்தில் கஜமுகாசுரன், "ஓம் நமச்சிவாய!" என்று கூவினன். அப்பொழுதுதான் தமது பக்தர்களில் ஒருவனை கஜமுகாசுரனைச் சூலாயுதத்தினுல் இரண்டு துண்டாகப் பிளந்து விட்டோமே என்றஉண்மை சிவபிரானுக்குத் தோன்றியது. அத்துடன் அந்த அசுரன் பிரம்மாவிடம் அரிய பல வரன்களைப் பெற்ற வன். அப்படிப்பட்டவன் செத்தால் பிரம்மாவின் வாக்குப் பொய்யாகிவிடும். பக்தனைப் படுகொலை செய்த பாவமும் பழியும் தம்மை வந்து சேரும். இந்த இக்கட்டான நிலைமையில் சிவபிரான் என்ன செய்வதென்று புரியாமல் சிறிது நேரம் தயங்கி நின்றபொழுது பிரம்மா அங்கு வந்து தோன்றினர்.

அவர் சிவனைப் பார்த்து, "மகாதேவா! உன் சூலாயுதத்தினுல் தலை துண்டிக்கப்பட்ட கஜாமுகசூரன் யார் என்பது உனக்குத் தெரியாததில்லை. இருந்தாலும் அவனுடைய பூர்வோத்திரத்தை உனக்கு நினைப்பூட்டுவது என் கடமையாகும். முன்னெரு காலத்தில் மகேசுவரன் என்று ஓர் அரசன் இருந்தான். அவன் சகல வேத சாஸ்திரங்களையும் கற்றறிந்த மேதை. திரிகாலமும் குறைவின்றிச் சிவபூஜை செய்தவன். ஒரு நாள் பிரகஸ்பதி அந்த அரசனைச் சந்திக்க வந்தார். அவரை மகேசுவரன் இரத்தின சிம்மாசனத்தில் அமர்த்தி, அவருடைய பாதங்களிலே தலை வைத்து வணங்கினன். அதைக் கண்டு மகிழ்ந்த பிருகஸ்பதி, உன்னுடைய எந்தத் தலை என் பாதங்களைத் தொட்டு வணங்கியதோ அந்தத் தலை உலகம் அனைத்தும் வணங்கும் பெருமையை அடையப் போகிறது. அடுத்த ஜன்மத்தில் நீ யானையாகப் பிறப்பாய். அப்பொழுது என் வாக்கு உன் விஷயத்தில் பலிக்கும்" என்று சொல்லி ஆசீர்வதித்துப் போனர்.

பிறகு ஒரு சமயம் மன்னன் மகேசுவரன் வேட்டையாடப் போனபொழுது எதிரில் நாரதமகரிஷி வந்தார். அவரை அரசன் கவனிக்கவில்லை. இதனல் கோபமடைந்த நாரதர், "அரசனே! என்னைப் பார்த்தும் பாராததைப் போல மதம் பிடித்த யானை மாதிரி சென்ருய் அல்லவா? ஆகையால் உடனே யானையாக மாறி யானைக் கூட்டத்துடன் வாழக்கடவாய்" என்று சாபமிட்டார்.



அரசன் நாரத மகரிஷியை வலம் வந்து வணங்கி, "சுவாமி! உங்களுடைய சாபத்தை எனக்குச் செய்த பேருபகாரமாகவே நான் கருதுகிறேன். அடுத்த ஜன்மத்தில் எனக்கு எத்தனையோ நன்மைகள் ஏற்பட இருக்கின்றன. இந்த மனித உடல் நீங்கி, அடுத்த ஜன்மம் எப்பொழுது ஏற்படுமென்று ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். உங்கள் அன்பினுல் அது கிட்டிவிட்டது!" என்ருன்.

நாரதர் ஞானதிருஷ்டியினுல் உண்மையை அறிந்து, "அரசனே! எல்லாம் தெய்வச் செயலால் நடக்கின்றன. நீயும் நானும் எல்லோருமே இறைவன் சித்தப்படி இயங்குகிறவர்கள். உனக்கு விரைவில் அருள் பாலிக்க விரும்பியே என் மூலமாக உனக்கு ஒரு சாபம் ஏற்படச் செய்திருக்கிருர் சர்வேசுவரன். உனக்குப் பிரம்மா அளித்த வரம் விரைவில் பலிக்கப்போகிறது. சந்தோஷமாய்ப் போய் வா" என்று விடை கொடுத்து அனுப்பினர்.

அரசன் மகேசுவரன் யானையுருவம் பெற்றுக் கஜமுகாசுரன் என்ற பெயரோடு உலகில் உலவிவர ஆரம்பித்தான்.

கஜமுகாசுரனுக மாறிய மன்னன் மகேசுவரன் எப்பொழுது பிருகஸ்பதியின் வாக்குப் பலிக்குமோ என்ற ஏக்கம் கொண்டு அலைந்து வந்தான். என்ருலும் சிவபூஜையை அவன் கைவிடவில்லை. முக்காலமும் அவன் பரமேசுவரனைத் தியானித்துக்கொண்டிருந்தான்

பரமசிமனும் பார்வதியும் தங்கியிருந்த பூஞ் சோலையை அடைந்தபொழுது, அவனுக்கு மதம் பிடித்தது. பூஞ்சோலையைத் துவம்சம் செய்துபரமேசுவரனின் கோபத்துக்கு இலக் காகியபொழுது சிவபிரான் ஏவிய சூலாயுதம் அவனுடைய தலையைத் துண்டித்தது. அந்த நேரத்தில் கூட அவன் இறைவனை மறக்க வில்லை. துண்டிக்கப்பட்டுக் கீழே விழுந்த அவனுடைய தலை, "நமச்சிவாய!" என்று இறைவனின் திருநாமத்தை உச்சரித்துக் கொண்டே விழுந்தது.

எல்லாம் அறிந்த சர்வேசுவரனுக்குக் கஜமுகாசுரன் யார் என்பதும், அவனுக்குப் பிருகஸ்பதி அளித்த வரமும், நாரதர் அளித்த சாபமும் நினைவுக்கு வந்தன. பிருகஸ்பதியின் வாக்குப் பொய்யாகமலிருக்க, கஜாமுகாசுர னின் தலை எல்லோரும் வணங்கும் தன்மை யில், சிரஞ்சீவியாக இருக்கவேண்டும். அதே சமயம் தமது பக்தனை கஜாமுகாசுரனுக்கு முக்தியும் கிடைக்கவேண்டும். இப்படிச் சிந்தித்த சிவபிரான் கஜமுகாசுரனுக்குச் சாருப முக்தியை அளித்தார். அவனுடைய தோலைத் தமது இடுப்பிலே உடுத்துக் கொண் டார். அவனுடைய யானைத் தலையைச் சொர்க்கவாசலில் வைத்தார்.

உமாதேவயார் காலக்கிரமத்தில் கரு பூர்த்தியாகி விநாயகரைப் பெற இருந்த சமயத்தில், தன்னைக் கொல்லப்போகும் காலனாக விநாயகர் பிறக்க இருக்கும் செய்தி எப்படியோ செந்தூரனுக்குத் தெரிந்து விட்டது. அவன் காற்றாக மாறி, உமாதேவி யாரின் கருவில் புகுந்து குழந்தையாக வளர்ந்துகொண்டிருந்த விநாயகரின் தலையை வெட்டிக் கொண்டுபோய் விட்டான். இதனால் விநாயகர் பிறக்கும்பொழுது தலை யில்லாத குழந்தையாகப் பிறந்தார். அந்தக் குழந்தையைப் பார்த்து உமாதேவி துணுக் குற்றாள். செந்தூரனை அழிக்கத் தன் கர்ப்பத் தில் தோன்றிப் பிறக்கப் போவதாகச் சொன்ன விநாயகப்பெருமான் இப்படி ஏமாற்றி விட்டாரே என்று கண்ணீர் வடித் தாள்.

அப்பொழுது தலையில்லாத குழந்தை பேச ஆரம்பித்தது—"தாயே! தலையில்லாமல் நான் பிறந்திருக்கிறேனே என்று கவலை கொள் ளாதே. ஒரு காரணத்தோடுதான் நான் இப்படிப் பிறந்திருக்கிறேன். கஜமுகாசுரன் என்ற சிவபக்தனின் அழகான யானைத்தலை சொர்க்கத்தின் வாசலிலே பத்திரமாகப் பாது காத்து வைக்கப்பட்டிருக்கிறது. அந்தத் தலையைப் பிரம்மதேவர் கொண்டுவந்து என் தலையில் பொருத்துவார். செந்தூரனை விரைவில் நான் சங்கரிப்பேன்" என்றார் விநாயகர்.

அவர் சொல்லியபடி கஜமுகாசுரனின் தலை சொர்க்கத்திலிருந்து கொண்டு வரப்பட்டு, தலையில்லாத குழந்தைக்குப் பொருத்தப் படவே, விக்னேசுவரருக்கு யானைமுகம் ஏற் பட்டது. செந்தூரனுக்கு மனிதராலோ தேவ ராலோ மிருகத்தாலோ மரணமில்லை என்று பிரம்மா வரம் கொடுத்திருந்தபடியால் அந்த வரத்தைப் பொய்யாக்காமல் செந்தூரனைக் கொல்லவே விநாயகக்கடவுள் யானை முகத்தைத் தாங்கினார். மனிதனாலும் மிருகத் தினாலும் மரணமில்லாத வரம் பெற்றிருந்த இரணியனைக் கொல்லத் திருமால் மனித உடலும் சிங்கத்தின் தலையும் உடைய நரசிங்கமாக அவதரித்ததைப் போல, செந் தூரனைச் சங்கரிக்க விநாயகக்கடவுள் மனித உடலும் யானைத் தலையுமாகத் தோன்றிச் செந்தூரனை அழித்தார். அதே சமயத்தில் பிருகஸ்பதியின் வாக்கை அனுசரித்து எல்லாத் தேவர்களும் வணங்கும் அந்தஸ்து கஜமுகாசுரன் தலைக்கு ஏற்பட, அவனுடைய தலையைத் தாமே தாங்கிக்கொண்டார்.

இதுதான் பார்க்கவ புராணம் என்ற விநாயக புராணத்தில் விநாயகருக்கு யானைத் தலை ஏற்பட்டதைப் பற்றிக் கூறப்பட்டிருக் கும் வரலாறு. ∅



# இலங்கை நினைவுகள்

**சுவாமி தன்மயானந்தர்**

## விவேகானந்தர் விழா

சுவாமி விவேகானந்தர் மேலை நாட்டில் தமது வேதாந்த திக்விஜயம் முடிந்த பின்னர் 1897-இல் இலங்கைக்கு விஜயம் செய்தார். அன்று துவங்கிய ஸ்ரீ ராமகிருஷ்ண இயக்கத்தின் பணிகள் இன்று வரையிலும் இலங்கையில் ஆர்ப்பாட்டமின்றி அமைதியாகவும் நிலையாகவும் நியாயமான பாராட்டுதலுக்கு உரிய வகையில் நடந்து வருகின்றன.

இந்த ஆண்டு ஜூன் மாதம் 20, 21, 22 ஆகிய தேதிகளில் யாழ்ப்பாணத்தில் 'விவேகானந்தர் விழா' மூன்று நாட்களுக்குச் சிறப்பாக நடந்தேறியது.

இந்த விழாவினை ஸ்ரீ ராமகிருஷ்ண சேவாச்ரமம், விஸ்வ ஹிந்து பரிஷத், ஸ்ரீ பரமானந்த ஆச்ரமம், ஞானசம்பந்தர் ஆதினம் ஆகியவை ஒன்றுகூடி நடத்தின.

இலங்கை அரசின் செயலாளர் ஸ்ரீ யோகேந்திரா துரைசுவாமி அவர்கள் இந்த விழாவிற்குத் தலைமை தாங்கி நடத்தியதோடன்றி, விழா பெருவிழாவாக விளங்கியதற்குத் தேவையான எல்லா ஏற்பாடுகளையும் செய்திருந்தார்,

இந்துமதத்தில் பல பிரிவுகள் இருக்கின்றன. எனவே, இந்துக்களின் ஆற்றலும் அங்குமிங்குமாக சிதறியுள்ளது. இந்த நிலையில் இலங்கை வாழ் இந்துக்களிடையே சகோதரத்துவத்தையும் ஒரு கட்டுக்கோப்பையும் உண்டாக்க வேண்டும் என்பதுதான் இலங்கையில் நடைபெற்ற இந்த விவேகானந்தர் விழாவின் அடிப்படை நோக்கமாக விளங்கியது.

ஜூன் 20-ஆம் நாள் மாலை 4-30க்கு சுவாமி விவேகானந்தரின் பெரிய திருவுருவப் படத்தைத் தாங்கிய ஊர்தி, யாழ்ப்பாணம் வண்ணை வைத்தீச்வரர் வித்யாலயத்திலிருந்து புறப்பட்டு மத்திய கல்லூரி மைதானத்தை அடைந்தது. இந்த ஊர்வலத்தில் ஆண்களும் பெண்களுமாக சுமார் 5,000 பேர் கலந்துகொண்டனர்.

அன்றைய தினம் மத்திய கல்லூரியின் விளையாட்டு மைதானத்தில் மாலை 6-30 மணிக்குப் பொதுக்கூட்டம் துவங்கியது.

இந்தக் கூட்டத்தில் அமைச்சர் தொண்டைமான் (அரசு செயலாளர்), யோகிந்திரா துரைசுவாமி, மற்றும் இந்தியாவிலிருந்து சென்றிருந்த சரோஜினி வரதப்பன், பேராசிரியர் ஆர். பாலசுப்ரமணியம், விவேகானந்தர் பாறை நினைவுசின்னக் கமிட்டியைச் சேர்ந்த மணியம், விஸ்வ ஹிந்து பரிஷத் செயலாளர் எஸ். வேதாந்தம், பொள்ளாச்சி நா. மகாலிங்கம், கிரிதாரி பிரசாத் ஆகியோரும் நானும் 'விவேகானந்தர் வகுத்த வழி' குறித்துச் சிறப்புரை நிகழ்த்தினோம். சுமார் 6,000 பேர் கலந்துகொண்ட இந்தப் பொதுக்கூட்டம் குறிப்பிடத்தக்க ஒன்றாக விளங்கியது. பொதுக்கூட்டத்தைத்

தொடர்ந்து ஒரு கலைநிகழ்ச்சியும் இசை நிகழ்ச்சியும் இடம் பெற்றன.

இந்த விவேகானந்த விழாவின் ஓர் அங்கமாக ஜூன் 21-ஆம் நாள் கரவெட்டியில் உள்ள ஸ்ரீ பரமானந்த ஆச்ரமத்தில் ஒரு கருத்தரங்கு நடைபெற்றது. 'மாறிவரும் உலகில் இந்து சமய அறநெறிகள்' என்ற தலைப்பில் இந்தக் கருத்தரங்கு காலை 8 மணி முதல் பகல் 2 மணிவரை நடைபெற்றது. மா. ஞானப்பிரகாசம், பேராசிரியர் ரா. பாலசுப்ரமண்யம், செந்தில் துறவி ஆகியோரும் நானும் உரை நிகழ்த்தினோம்.

மாலை 4 30 மணிக்கு 'இந்து சமயக் கல்வி' 'இந்தியப் பெண்மணிகள்' ஆகிய தலைப்புகளில் விவேகானந்தரின் கருத்துக்களின் அடிப்படையில் கருத்தரங்குகள் இடம் பெற்றன.

ஜூன் 22-ஆம் தேதி காலையில் பரமானந்த ஆச்ரமத்தில் கருத்தரங்கு நடைபெற்றது. அன்று, மூன்று நாள் விழாவையொட்டிய தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. தமிழகத்திலிருந்து சென்றிருந்த அன்பர்களுக்கு விருந்துபசாரம் வழங்கப் பெற்றது. அன்று மாலை நடைபெற்ற சிறப்புப் பேருரைகளுடன் மூன்றும் நாள் விழா நிறைவடைந்தது.

**பௌத்தம்**

இலங்கையின் இயற்கை வனப்பு, புத்தர் கோவில்கள், கண்டி, நுரேலியா ஆகிய இடங்களைக் காண்பதற்கு நா. மகாலிங்கம், கிரிதாரி பிரசாத் ஆகியோருடன் சென்றிருந்தேன்.

பௌத்த சமயமும் சைவ சமயமும் இலங்கையில் செல்வாக்குடன் இருந்து வருகின்றன. பௌத்தம் சிங்களவர் தேசிய மதமாக இப்போது இலங்கையில் இருந்து வருகிறது.

இலங்கையில் ஜனாதிபதியோ ஏனைய அமைச்சர்களோ பதவி ஏற்குமுன்பு, புத்தர் பெருமானின் அருளையும் பௌத்த குருமார்களது ஆசியையும் பெற்ற பின்பே தங்கள் பணியைத் துவக்குகிறார்கள்,

இலங்கையில் சுமார் 10,000 பௌத்தத் துறவிகள் இருக்கிறார்கள். இந்த பிக்குக்கள் சமுதாயத்தில் நல்ல செல்வாக்குடன் விளங்குகிறார்கள்.

அசோகரின் மகள் சங்கமித்திரை பௌத்தப் பிரசாரத்திற்காக இலங்கை சென்றபோது, போதி மரத்தின் கிளை ஒன்றை உடன் எடுத்துச் சென்றிருந்தாள். அதன் மரம் இன்றும் அனுராதபுரத்தில் உள்ளது.

அந்த மரத்தைச் சுற்றி ஒரு பெரிய கோவிலும் பல 'டாகபா'க்களும் அமைந்துள்ளன. பாலி மொழியில் 'டாகபா' என்பது 'தாது கர்ப்பம்' அதாவது புத்தரின் அஸ்தியைத் தாங்கியிருக்கும் ஓடு என்று பொருள்படும்.

பிக்ஷைப் பாத்திரத்தைக் கவிழ்த்து வைத்ததைப் போன்ற அமைப்பில், டாகபாக்கள் எனப்படும் புத்தர் கோவில்கள் சிறியதும் பெரியதுமாக நூற்றுக்கணக்கில் இலங்கை உள்ளன.

புத்தம், தர்மம், சங்கம் ஆகியவற்றை உணர்த்தும் வகையில் டாகபாக் கோவிலின் அடியில் மூன்று படிகட்டுகள் அமைந்துள்ளன. அதையொட்டி துக்கத்தின் காரணத்தை உணர்த்தும் வகையில் நான்கு கோணங்கள் இருக்கின்றன. கருவறையில் உள்ள புத்ததேவரின் திருவுருவத்தை நோக்கிச் செல்பவர்கள், அஷ்டாங்க மார்க்கத்தை உணர்த்தும் வகையில் அமைந்திருக்கும் எட்டுப்படிகளையும் கடந்து செல்கிறார்கள்.

அனுராதபுரம், கண்டி ஆகிய இடங்களில் உள்ள பௌத்த ஆலயங்களில் புத்ததேவரின் அஸ்தியை வைத்து வழிபட்டு வருகிறார்கள். புத்தபிரானின் பல் கண்டியில் உள்ள பௌத்த ஆலயத்தில் உள்ளது. பௌத்தர்களுக்குப் புனிதமான இந்தக் கோவில் Tooth Temple என்ற பெயரால் வழங்கப்படுகிறது.

ஒவ்வொரு ஆண்டும் புத்தர் விழாவின் போது, புத்தரின் புனிதப் பல்லின் மாதிரியாக அமைந்த (உற்சவர் போன்ற) மற்றொரு பல்

பிக்குக்களால் ஏந்தி வரப்பட்டு யானைமீது வைத்து நகரின் முக்கிய வீதிகளில் விமரிசையாக ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படுகிறது. அந்த விழாவில் புத்தரின் பல்லைத் தாங்கிச் செல்லும் யானைக்கு முன்னும் பின்னுமாகப் பல யானைகள் செல்வதும் புஷ்பங்களைப் பொழிவதும் வாத்திய கோஷ்டிகளும் வானவேடிக்கைகளும் விழாவின் முக்கிய அம்சங்களாகத் திகழ்கின்றன.

சயாம், பர்மா, கம்போடியா, லாவுட்ஸ் ஆகிய இடங்களில் பௌத்தம் மிகுந்த செல்வாக்குடன் இருந்து வருகிறது. அந்நாட்டு மன்னர்கள் காணிக்கையாக வழங்கிய விலையுயர்ந்த ஆபரணங்களையும் பொருள்களையும் புத்தரின் பல் கோவிலில் பொதுமக்களின் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன.

புத்தமதத்தைச் சேர்ந்த ஆண்களும் பெண்களும் கூட்டமாக பௌத்த ஆலயங்களுக்குச் சென்று, அமைதியாக இருந்து தம்மபதத்திலிருந்து பல பாகங்களைப் படிப்பதையும் தோத்திரங்களை ஓதுவதையும் கண்டி, அனுராதபுரம் ஆகிய இடங்களில் காணலாம்.

50 அடி, 60 அடி உயரத்தில் பத்மாசனத்தில் புத்தர் வீற்றிருக்கும் சிலைகள், நின்ற கோலத்தில் அமைந்த சிலைகள், பரிநிர்வாணத்தைக் குறிக்கும் புத்தர் படுத்திருக்கும் நிலையில் அமைந்த சிலைகள்—என்று இலங்கையில் புத்தருக்கு ஆயிரக்கணக்கான சிலைகளை அமைத்திருக்கிறார்கள்.

### முடிவுரை

சுவாமி விவேகானந்தருக்குப் பின் சுவாமி நிரஞ்ஜனானந்தரும் சுவாமி சிவானந்தரும் அந்நாளில் இலங்கையில் சில காலம் தங்கி இராமகிருஷ்ண இயக்கத்தின் பணிகளை ஆற்றினர்.

சுவாமி விபுலானந்தரைத் தமிழுலகிற்கு அளித்த பெருமை இலங்கைக்கே உரியது. அவரது நினைவாக நூல் நிலையங்களும் நினைவாலயங்களும் சிலைகளும் இலங்கையின் பல இடங்களிலும் அமைத்துப் போற்றி வருகிறார்கள்.

மட்டக்களப்பில் உள்ள இராமகிருஷ்ண மிஷனின் குருகுலத்தில் ஆன்மிக அடிப்படையில் கல்வி அளிக்கப்படுகிறது.

ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் சார்பாக பல கல்வி நிலையங்கள் முன்பு இலங்கையில் இயங்கி வந்தன. இலங்கை அரசு கல்வி நிலையங்களை தேசியமயமாக்கியபோது ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் கல்வி நிறுவனங்களும் தேசியமயமாக்கப்பட்டன. எனினும் இராமகிருஷ்ண மிஷன் முன்பு வழங்கிய அதே பெயர்களாலேயே இலங்கை அரசாங்கம் அந்தக் கல்வி ஸ்தாபனங்களை இப்போதும் நடத்தி வருகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

பல்லாண்டுகளாக கதிர்காமத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் அன்னதானப் பணியை நடத்தி வந்தது. கதிர்காமத்தில் கோவிலைச் சுற்றியுள்ள இடங்களை அரசாங்கம் மேற்கொண்ட பின்பு, அந்த அன்னதானப் பணியின் பயன் மக்களுக்கு கிடைக்க இயலாமற் போய்விட்டது,

இலங்கையில் சைவ சமயம் தமிழ் நாட்டில் இருப்பதைவிடவும் நிறைந்த உயிர்ச் சக்தியுடன் இருந்து வருகிறது. இலங்கை வாழ் இந்துக்கள் மத விழிப்புக் கொண்டவர்கள் என்பதனால் மிகுந்த அளவில் பாராட்டுதலுக்கு உரியவர்கள் ஆகிறார்கள்.

திரிகோணமலை, மட்டக்களப்பு, கண்டி, கொழும்பு ஆகிய பல இடங்களில் நா. மகாலிங்கமும் கிரிதாரி பிரசாத்தும் நானும் சொற்பொழிவுகள் நிகழ்த்தினோம்.

மற்றும் பல முருகன் கோவில், விநாயகர் கோவில், சிவன் கோவில், அம்மன் கோவில் ஆகியவற்றுக்கும் சென்றிருந்தோம். இங்கெல்லாம் தமிழ்நாட்டில் நடைபெறுவதைப் போன்றே பூஜை முறைகளை அமைத்துள்ளார்கள்.



# ஸ்ரீராமகிருஷ்ண மிஷனின் நிவாரணப் பணி

**மோர்வியில் வெள்ள நிவாரணப் பணி**

ராஜ்கோட், ஸ்ரீராமகிருஷ்ண ஆச்ரமம் தற்போது சௌராஷ்டிரா கட்ச் பகுதிகளில் வெள்ள நிவாரணப் பணிகளைச் சிறந்த முறையில் நடத்தி வருகிறது.

இதற்கு முன்னர், குஜராத் மாநிலத்தைச் சேர்ந்த ராஜ்கோட் மாவட்டத்தின் மோர்வி பகுதியில் 1979 ஆகஸ்ட் மாதத்தில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டபோது, ராஜ்கோட் ஸ்ரீராமகிருஷ்ண ஆச்ரமத்தினர் ஆற்றிய பணிகளைப் பற்றிய சில விவரங்கள் கீழே தரப்படுகின்றன.

மோர்வியில் வெள்ளச் சேதம் பற்றிய தகவல் கிடைத்தவுடனேயே ஸ்ரீராம கிருஷ்ண ஆச்ரமத்தைச் சேர்ந்த துறவிகள் நிவாரண வேலைகளைத் துவக்கினர்.

நிவாரணப் பணியின் ஆரம்பத்தில் பின்வரும் பொருள்கள் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உடனுக்குடன் அப்போதே விநியோகிக்கப்பட்டன.

| | |
|---|---|
| 1,10,750 | உணவுப் பொட்டலங்கள் |
| 31,650 | கிலோ உணவு தானியங்கள் |
| 1,000 | கிலோ சர்க்கரை |
| 30,406 | பழைய துணிகள் |
| 1,500 | பாய்கள் |
| 3,350 | மீட்டர் புதிய துணி |

இவை தவிர பெருமளவில் பழங்கள், காய் கறிகள், சமையலுக்குரிய எண்ணெய், பால் பவுடர், குழந்தை உணவு, தேயிலை மற்றும் அன்றாடத் தேவைக்கான அலுமினியப் பாத்திரங்கள், பிளாஸ்டிக் சாமான்கள் விநியோகிக்கப்பட்டன.

ஸ்ரீராமகிருஷ்ண மிஷனின் மேற்பார்வையில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு விநியோகிப்பதற்காக இந்தியாவில் எந்த ஊரிலிருந்தும் பொதுமக்களால் அனுப்பப்படும் உடைகள், போர்வைகள், பாத்திரங்கள், மருந்துகள் முதலியனவற்றை இலவசமாக ரெயிலில் அனுப்பி வைக்கும் சலுகையை இந்திய ரெயில்வே இலாகாவினர் 1979 அக்டோபர் 31-ஆம் தேதி வரை வழங்கி இருந்தனர்.

இந்த வெள்ள நிவாரணப் பணியின் அடுத்தக் கட்டமாக, சர்க்கார் மானியமாக அளித்த இடங்களில் 600 வீடுகளும் ஒரு சமூக நலப் பொதுவிடுதியும் கூடிய 3 புதிய காலனிகளை உருவாக்க ஸ்ரீராம கிருஷ்ண ஆச்ரமம் முடிவு செய்தது.

அதன்படி தற்போது (ஆகஸ்ட் 1980) மோர்வி நகரத்தில் 250 வீடுகளும், வனலியா கிராமத்தில் 183 வீடுகளும் கட்டும் வேலைகள் திருப்திகரமாக நடந்து வருகின்றன. சமீபத்தில் லால்பாக் கிராமத்திலும் வீடுகள் கட்டும் வேலைத் துவக்கப் பட்டுள்ளது.

இவை தவிர, வெள்ளத்தினால் மிகவும் பாதிக்கப்பட்ட 106 குடும்பத்தினர் தாங்களாகவே வீடுகளைக் கட்டுவதற்குத் தலா ஒவ்வொரு குடும்பத்திற்கும் ரூ. 3,000 வீதம் ஸ்ரீராமகிருஷ்ண ஆச்ரமத்தின் மூலம் வழங்கப்பட்டது.

நமது ஆசைகள் எந்த அளவுக்கு சுயநலமற்றனவாயும், சொந்த வாழ்க்கையைச் சாராதனவாயும் இருக்கின்றனவோ, அந்த அளவுக்கு தோல்விபற்றியும், சாவு பற்றியும் நமக்குள்ள அச்சம் நீங்கும்.

— பெர்ட்ராண்ட் ரஸ்ஸல்

### ஆந்திரப் பிரதேசம்

கடந்த ஆண்டு (13-5-1979) நெல்லூர், பிரகாசம் ஆகிய மாவட்டங்களில் ஸ்ரீ ராம கிருஷ்ண மிஷன் புயல் நிவாரணப் பணி களைத் துவக்கியது. இந்த இரண்டு மாவட்டங்களிலும் 52 கிராமங்களில் வெகு வாகப் பாதிக்கப்பட்ட 2630 குடும்பங் களுக்கு ரொக்கப் பணமாக ரூபாய் 2 இலட்சத்திற்கும் அதிகமாக விநியோகிக்கப் பட்டது.

இது தவிர, அரிசி 19,500 கிலோ, வேட்டி கள் 3,750, புடைவைகள் 3,700, போர்வை கள் 1,000, பாய்கள் 1,200, சமையல் பாத் திரங்கள் 1,050, விளக்குகள் 370 ஆகியவை யும் அந்த மாவட்டங்களில் புயலால் பாதிக்கப்பட்டோருக்கு விநியோகிக்கப் பெற்றன.

29-8-79 முதல் 10-9-79 வரை ராஜ மகேந்திரத்தில் உள்ள இராமகிருஷ்ண மிஷன் கிளையின் மூலம் புஷ்கரம் திருவிழா வின்போது 1,76,600 குழந்தைகளுக்குப் பால். மோர் வழங்கப்பட்டன.

### பங்களாதேஷ்

பங்களாதேஷின் 3 இடங்களில் பால் விநி யோகமும், 4 இடங்களில் மருத்துவ உதவி யும் இராமகிருஷ்ண மடத்தின் துறவிகளால் ஆண்டு முழுவதும் நடத்தப்பட்டு வரு கின்றன.

### அருணசலப் பிரதேசம்

1979 டிசம்பர் மாதம் கலவரத்தினால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு ஷில்லாங், ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் கிளை உடனுக்குடன் நிவாரணப் பணிகளை மேற்கொண்டது. குழந்தைகள் உணவு 78 டின், க்ளுகோஸ் 80 பேக்கட்டுகள் 51 குடும்பங்களுக்கு விநி யோகிக்கப்பட்டன. மற்றும் 200 வேஷ்டி கள், 300 புடைவைகள், 250 போர்வைகள் ஆகியவையும் பாதிக்கப்பட்டோருக்கு இந்த நிவாரணப் பணியின்போது வழங்கப் பட்டன. 50 நோயாளிகளுக்கு அங்கு மருத்துவ உதவி அளிக்கப்பட்டது.

அருணசலப் பிரதேசத்தில் ஜீரோ அருகில் ரேரு, ஹாஜாங் கிராமங்கள் தீ விபத்திற்கு உட்பட்டன. ஆலாங், ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் கிளை தீ விபத்தினால் பாதிக்கப் பட்ட அந்தக் கிராம மக்களுக்கு 460 கம்பளிப் போர்வைகளை ஆரம்ப நிவாரணப் பணியின்போது வழங்கியது.

### அஸ்ஸாம்

1980 ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் காம ரூப் மாவட்டத்தில் மோகல்மா, ஜல்கானு, சத்யேபாடி, பாரிகடாடங், ரங்கபாலி, நன்னூர்ப்பட்டி ஆகிய கிராமங்கள் கலவரத் தினால் பெரிதும் பாதிக்கப்பட்டன. கௌ ஹாடி ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் கிளை அந்தக் கிராமங்களில் உடனுக்குடன் நிவாரணப் பணிகளை மேற்கொண்டு பின் வருவனவற்றை வழங்கியது :- 1 அண்டா, 1 இரும்புக்கடாய், 1 கரண்டி, 2 அகப்பைகள், 1 தட்டு, 1 டம்பளர், 1 தண்ணீர்ப் பாத்திரம் (mug) ஆகியவை அடங்கிய 1717 செட் அலுமினியப் பாத்திரங்கள்; 1717 ஹரிக்கேன் விளக்குகள், 1500 வேஷ்டிகள், 1422 போர் வைகள், 1500 புடைவைகள், 13,800 குழந்தை உடுப்புகள், 2000 கம்பளிப் போர் வைகள் ஆகியவை அளிக்கப்பட்டன.

### திரிபுரா

1980-ஆம் ஆண்டு ஜூன் மாதம் அகர் தாலாவில் கலவரம் காரணமாகப் பாதிக்கப் பட்டோருக்கு பேலூர் ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் தலைமைக் காரியாலயம் நிவாரணப் பணிகளை மேற்கொண்டது. அவ்வமயம் பாதிக்கப்பட்ட அகர்தாலா மக்களுக்கு இன வேறுபாடின்றி விநியோகிக்கப்பட்டவை வருமாறு : 1 அண்டா, 1 இரும்புக்கடாய், 1 கரண்டி, 2 அகப்பைகள், 1 தட்டு, 1 டம்ளர், 1 தண்ணீர்ப் பாத்திரம் ஆகியவை அடங்கிய 500 செட் அலுமினியப் பாத்திரங் கள், 500வேட்டிகள், 500 புடைவைகள், 2000 குழந்தைகளுக்கான உடைகள் ஆகியவை அளிக்கப்பட்டன. மேலும், துணி, போர்வை கள், பால்பௌடர், மருந்து வகைகள், சமையல் பாத்திரங்கள் அடங்கிய லாரியும் ஜூன் 24-ஆம் தேதி போலீஸ் பாதுகாப் புடன் கலவரம் நடைபெற்ற இடத்திற்கு அனுப்பி வைக்கப்பட்டது.

# வேதாந்த முழக்கம்

'அண்ணா' சுப்ரமண்யம்

**பாவத்திற்குப் பிராயச்சித்தம் ஞானமே**

31. அறிந்தோ அறியாமலோ செய்த எல்லாப் பாவச் செயல்களுக்கும் நிச்சயமாக அழிவை உண்டாக்குவது ஞானம்தான் என்று வேதாந்தம் முழங்குகிறது.

**எல்லாம் பிரம்ம மயம்**

32. உருவமுடையதாகவும் உருவமற்றதாகவும், குணமற்றதாகவும் குணவடிவினதாகவும் உண்மைப் பொருள் திகழ்கிறது. அதுவே பரப்பிரம்மம் என்று வேதாந்தம் முழங்குகிறது.

33. துவிஜன் அல்லது இருபிறப்பாளன் என்ற தன்மை விதிகளைப் பின்பற்றி நடப்பதானாலும், விப்ரன் என்ற தன்மை வேதத்தை ஓதுவதானாலும், பிராம்மணன் என்ற தன்மை பிரம்ம ஞானத்தினாலும் ஏற்படுகின்றன என்று வேதாந்தம் முழங்குகிறது.

34. அனைத்தின் வடிவமாகவும் நிலை பெற்றிருப்பது பிரம்மம். அனைத்தும் பிரம்மமாகவே நிலைபெற்றுள்ளது. காரியமானது காரணத்திலிருந்து வேறுபடாதது என்று வேதாந்தம் முழங்குகிறது.

35. ஸத்தும் சித்தும் ஆனந்தநிலைகளும் எல்லாப் பொருள்களிலும் விளங்குகின்றன. ஆகையினால் எல்லாம் பிரம்ம மயம் என்று வேதாந்தம் முழங்குகிறது.

36. விழிப்பு கனவு உறக்கம் என்ற மூன்று நிலைகளும் எந்த ஆத்மாவிற்கு விளையாட்டிடமாக அமைகின்றனவோ, அந்த ஆத்மாவையே பிரம்மமாக அறிய வேண்டும் என்று வேதாந்தம் முழங்குகிறது.

37. எது ஆதியில் இல்லையோ, மேலும் எது முடிவில் இல்லையோ அது நடுவில் தோன்றினாலுங்கூட இல்லாததே ஆகும். ஆகையால் தோன்றி மறையும் உலகம் முழுவதும் இல்லாததே ஆகும் என்று வேதாந்தம் முழங்குகிறது.

38. எது ஆதியில் இருப்புடையதோ, எது முடிவில் இருப்புடையதோ, எது நடுவிலும் பிரகாசிக்கிறதோ, அது (ஸ்வயம்) தானாகவே பிரம்மமாகவே உள்ளது. இந்த ஒன்றே உண்மை என்று வேதாந்தம் முழங்குகிறது.

**துவைதத்தைக் கடக்க வேண்டும்**

39. அறம் பொருள் இன்பம் என்ற மூன்றை மட்டுமே வாழ்க்கைப் பயனாகக் கொண்ட மனிதர்கள் மிருகங்களைப் போன்றவர்களே என்பது நிச்சயம்; மோட்சம் அல்லது வீடு என்பதை வாழ்க்கைப் பயனாகக் கொண்ட மனிதனே சிறந்தவன் என்று வேதாந்தம் முழங்குகிறது.

40. குடம் குடுவை முதலிய அனைத்தும் மண் மட்டுமேயாகும். அது போன்றே உலகமனைத்தும் பிரம்மமேயாகும் என்று வேதாந்தம் முழங்குகிறது.

41. பிராண தர்மம், மனோ தர்மம் ஆகிய பசி—தாகம், சோகம்—மோகம், மூப்பு—மரணம் என்ற ஆறையும் ஒழித்துப் பிறவிக்கு வேர் போன்ற சத்துவம் ரஜஸ் தமஸ் என்ற குணங்களைக் கடந்து, ராக த்வேஷம் இன்ப துன்பம் வெற்றி தோல்வி போன்ற துவந்துவங்களை எல்லாம் பிளந்து விட்டு, அனைத்திற்கும் அப்பாலுள்ள ஒன்றேயாகிய பிரம்மத்தை அறிந்து ஒருவன் மோட்சத்தை அனுபவிக்கிறான் என்று வேதாந்தம் முழங்குகிறது.

42. காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாச்சரியம் என்ற ஆறு உட்பகைவரையும் வெட்டியழித்து, கோட்டைகளைப் போன்ற அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்தமயம் என்ற ஐந்து

கோசங்களைப் பிளந்து அப்பாற் சென்று, பிறகு ஜாக்கிரத் ஸ்வப்னம் ஸுஷுப்தி துரீயம் என்ற நான்கு நிலைகளையும், பிறகு அறிபவன் அறிவு அறியப்படுவது என்ற த்ரிபுடியையும் கடந்து, துவைதம் அனைத்தையும் ஒழித்து, ஒன்றேயாகிய பிரம்மத்தை அடைய வேண்டும் என்று வேதாந்தம் முழங்குகிறது.

**நான் யார் ?**

**43.** நான் உடல் அல்ல; நான் உடலிற்கு உடையவன், உடலைப் பார்ப்பவன் என்ற நிச்சயத்தினுல் பிறப்பும் இறப்பும் இல்லாமல் அந்த உடலில் உறைபவன் என்று வேதாந்தம் முழங்குகிறது.

[ பிறப்பும் இறப்பும் ஸ்தூல உடலுக்கு உரிய தர்மங்களாகும்; அவை ஆத்மாவிற்கு இல்லை. ]

**44.** நான் பிராணன் அல்ல; நான் பிரகாச வடிவினனும் பிராணனுக்குச் சாட்சியும் ஆகியவன் என்ற நிச்சயித்தினுல் பசி தாகம் இல்லாத அமைதி ஏற்படுகிறது என்று வேதாந்தம் முழங்குகிறது.

[ பசியும் தாகமும் பிராண தர்மமாகும்; அவை ஆத்மாவிற்கு இல்லை.]

**45.** நான் மனது அல்ல; பிரகாச வடிவினனும் மனதிற்குச் சாட்சியும் ஆகியவன் என்ற நிச்சயித்தினுல் துக்கம் மதிமயக்கம் ஆகியவற்றிற்கு அழிவு ஏற்படும் என்று வேதாந்தம் முழங்குகிறது.

[ சோகமும் மோகமும் மனேதர்மமாகும். அவை ஆத்மாவிற்கு இல்லை.]

**46.** நான் புத்தி அல்ல; நான் பிரகாச வடிவினனும் புத்திக்குச்சாட்சியும் ஆகியவன் என்ற நிச்சயத்தினுல் 'நான் கர்த்தா' என்ற எண்ணத்திற்கு அழிவு ஏற்படும் என்று வேதாந்தம் முழங்குகிறது.

[ கர்த்ருத்வம் புத்தி தர்மம்; அது ஆத்மாவிற்கு இல்லை. ]

**நான் சாட்சி**

**47.** நான் அஞ்ஞான வடிவினனுக இருக்கவில்லை. நான் பிரகாச வடிவினனும் அஞ்ஞானத்திற்குச் சாட்சியும் ஆகியவன் என்ற நிச்சயத்தினுல் எல்லாத் துன்பங்களுக்கும் ஒழிவு ஏற்படும் என்று வேதாந்தம் முழங்குகிறது.

**48.** 'நான் சாட்சி' என்று எவன் அடிக்கடி ஆராய்ச்சியாலேயே (விவிச்ய ஏவ) அறிகிருனே அவனே விடுபட்டவன், அவனே ஞானி என்று வேதாந்தம் முழங்குகிறது.

**49.** நான் மாயை அல்ல; அதனுடைய செயலும் அல்ல; சாட்சியும் அல்ல; நான் பரப்பிரம்மமாக இருக்கிறேன் என்ற சந்தேகமற்ற ஞானத்தால் முக்தி என்று வேதாந்தம் முழங்குகிறது.

[ முன்பெல்லாம் 'நான் சாட்சி' என்று சொல்லிவிட்டு இங்கு 'நான் சாட்சி அல்ல' என்றது ஏனெனில், மாயைக் கடந்துவிட்டபின் மாயையும் மாயையின் காரியமும் இல்லாமையால் சாட்சித் தன்மையும் இல்லை.]

**50.** அனைத்தும் நான் அல்ல; நானே அனைத்தும்; அனைத்தும் என்னிடத்தில் உள்ளது என்று தெளிவாகத் தத்துவம் அறியப்பட்டபின் துன்பம் எப்படி இருக்க முடியும் என்று வேதாந்தம் முழங்குகிறது.

[ ஆத்மாவிற்குப் புறம்பாக ஒரு பொருளும் இல்லாததனுல் புறப்பாகப் பேசப்படும் அனைத்தும் நான் அல்ல. ]

—தொடரும்



உடற்பற்று அன்பு ஆகாது. ஏன் உடற்பற்றை அகற்ருதவரையில் உண்மையன்பே தோன்ருது.

**கீதைப் பேருரைகள்**

ஆசிரியர் : சுவாமி தன்மயானந்தர். துணை ஆசிரியர்: சுவாமி கமலாத்மானந்தர்
பதிப்பாளர் : சுவாமி தன்மயானந்தர், ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004
அச்சிடுபவர் : K. L. செல்லப்பன், சுத்தானந்தா அச்சகம், சென்னை 600 020